

‘ஜெ. கலாசாரம்’தான் ஜெயந்தி கலாசாரமா?

# கல்கி

KALKI
22.6.97
ரூ. 4.00

“நான் நடிக்க வேண்டுமானால்...”

– இந்த மாணவி போடும் கண்டிஷன்!

# "எல்லோர் கவனமும் எங்கள் மீது! தாங்க்யூ, என்டைஸ்!"

10%
தள்ளுபடி
மே 1 முதல் ஜூன் 30 வரை

என்டைஸ்
பள்ளிச்சீருடைகள்.
துடிப்புடன் திகழும்
பள்ளிப்பருவத்திற்கு
உறுதியான துணை.
படிக்கும்போதும்,
விளையாடும்போதும்.
என்டைஸ் சீருடை.
இளைய பாரதத்தின்
இதயத்தில்
இடம் பெற்றது.

## என்டைஸ்®

### பள்ளிச்சீருடைகள்

**சிறந்த ரகங்கள். சரியான விலை.**

**நேஷனல் டெக்ஸ்டைல் கார்ப்பொரேஷன்**



(தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரி) லிமிடெட்
ஒரு மத்திய அரசு நிறுவனம்

35-B, சோமசுந்தரம் மில்ஸ் ரோடு, கோயமுத்தூர் - 641 009.



"தேர்தல் திட்டமிட்டபடி நடந்தது என்றார் டைட்லர். 'யார் திட்டமிட்டபடி?' என்று கேட்கிறார்கள் தங்கபாலுவின் எதிர் கோஷ்டியினர்.

# தங்கபாலுவைத் தலைவராக்கிய 'தேர்தல்!'

ஜெயலலிதா முதல்வராக இருந்தபோது, அவர் கலந்து கொள்ளும் கூட்டங்களில் பாதுகாப்பு எப்படி இருக்குமோ கிட்டத்தட்ட அந்த அளவுக்கு அன்று நடிகர் சங்கத்தைச் சுற்றி இருந்தது. இ. காங்கிரஸின் மாநில மற்றும் அகில இந்தியத் தலைவர் தேர்தல்கள் அங்கே நடந்ததுதான் காரணம். நடிகர் சங்க வெளி கேட்டுக்கு இரு புறமும் கிட்டத்தட்ட 100 மீட்டர் இடைவெளிக்கு அப்புறம் தொண்டர்கள் நிறுத்தி வைக்கப்பட்டனர். நான்கைந்து சவுக்குத் தடுப்புகள், அதற்கப்புறம் மெட்டல் டிடெக்டர். சுமார் இருபதுக்கும் மேற்பட்ட போலீஸ் ஜீப்கள், வேன்கள், போதாதற்கு ஒரு தீயணைப்பு வண்டி (தண்ணீருடன்?).

போட்டோ ஒட்டிய அடையாளக் கார்டுடன்கூடிய பிரதேச காங்கிரஸ் கமிட்டி (P.C.C) உறுப்பினர்கள் மட்டுமே அரங்கத்துக்கு உள்ளே அனுமதிக்கப்பட்டனர்.

தேர்ந்தெடுக்கப்பட்ட பி.ஸி.ஸி. உறுப்பினர்கள் 569 பேர். இதில் மாவட்டத் தலைவர்களும் அடக்கம். மாநிலத் தலைவர் பதவிக்கு தங்கபாலு தவிர வேறு யாரும் மனு தாக்கல் செய்யாததால், (தங்கபாலு




கருத்து: அம்பை தேவா

தமக்கு ஆதரவானவர்களையே உறுப்பினர்களாக்கிக் கொண்டதை எதிர்த்து மற்றவர்கள் யாரும் தலைவர் தேர்தலில் போட்டியிடவில்லை) அவர் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டார்! கேக் வாக் என்று சொல்வார்களே; அதுபோல இதை எதிர்பார்த்துத்தானோ என்னவோ முன்னமேயே 'தலைவா வா! தலைமை தாங்க வா'' என்று அரங்கத்தைச் சுற்றி பெரிய பெரிய போஸ்டர்களை ஒட்டியிருந்தார்கள், அவரது ஆதரவாளர்கள்.

தேர்தல் 'திட்டமிட்டபடியும்' நேர்மையாகவும் நடந்து முடிந்து விட்டது என்பதால் டைட்லருக்கு ஏக சந்தோஷம். அன்று அகில இந்திய காங்கிரஸ் தலைவருக்கான தேர்தலும் நடந்ததால், மாநில தலைவர் தேர்வு முடிந்தவுடன் அகில இந்தியத் தலைவருக்கான தேர்தலில் வோட்டுப் போட்டார்கள் பி.ஸி.ஸி. உறுப்பினர்கள்.

மற்ற கட்சிகளைப் போலில்லாமல் காங்கிரஸ் கட்சித் தேர்தல் கொஞ்சம் வித்தியாசமானது. இங்கே வட்டம், நகரம் எல்லாம் கிடையாது. பொதுத் தேர்தல் வாக்குச்சாவடிகளின் எண்ணிக்கை அடிப்படையில் தேர்தல்கள் நடக்கின்றன. இதை பூத் கமிட்டி என்று சொல்கிறார்கள். அடிப்படை உறுப்பினர்கள் மூலம் தேர்ந்தெடுக்கப்படும் பூத் கமிட்டிச் செயலாளரும், தலைவரும், மாவட்ட காங்கிரஸ் பிரதிநிதிகளையும், பிரதேச காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர்களையும் தேர்ந்தெடுக்கிறார்கள். பின்னர், இவர்களால் மாவட்டத் தலைவர்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அப்புறம் மாநிலத் தலைவர். ஆனால் ''இந்த முறை எதுவும் நியாயமாக நடக்கவில்லை'' என்று குற்றம் சாட்டுகிறார் குமரி அனந்தன்.

''52,000 பூத்துகளில் எங்குமே தேர்தல் ஒழுங்காக நடைபெறவில்லை. நியாயமற்ற முறையில் நடந்த தேர்தல். டெல்லியில் இருப்பவர்களிடம் பலமுறை கேடுகளை எடுத்துச் சொல்லியும் கேட்கவில்லை. காரணம், அங்கிருப்பவர்கள், இங்கிருப்பவர்கள் செய்த தகிடு தத்தங்களுக்கு உடந்தை. மாநிலம் முழுவதும் தேர்தல் நடத்தாமலேயே தங்கள் ஆட்களை பி.ஸி.ஸி. உறுப்பினர்களாக நியமித்துக் கொண்டார்கள். 'தலைவராக'த் தேர்ந்தெடுக்கப்பட்டதாலேயே உயர்ந்து விட மாட்டார் தங்கபாலு. பொய்க் கால் கட்டிக் கொண்டவனைப் பார்த்து 'அவன் நல்ல உயரம்' என்று சொன்ன கதைதான். பதவியில் இருந்தாலும், இல்லாவிட்டாலும், தமிழ்நாட்டில் காங்கிரஸை காப்பாற்றுவதற்காக தீவிரமாகப் பணியாற்றுவேன்!'' என்று நம்மிடம் சொன்னார் குமரி அனந்தன். தேர்தல் முறையில் என்னதான் வருத்தங்கள் இருந்த போதும், இவரது சகோதரரான வசந்தோடு, தீவிர ஆதரவாளரான

எர்னஸ்ட் பால் உட்பட பத்துப் பேர் பி.ஸி.ஸி. 'உறுப்பினராகி' இருக்கிறார்கள். தேர்தல் நடந்த அன்று வோட்டுப் போட வந்த குமரியுடன் இருந்த தொண்டர்களை போலீஸ் உள்ளே அனுமதிக்காததால் கொஞ்சம் சலசலப்பு இருந்தது.

"ஏன் இவ்வளவு பலத்த போலீஸ் பாதுகாப்பு?" என்று தங்கபாலுவின் தீவிர ஆதரவாளர் ஒருவரிடம் கேட்டோம். "தேர்தல் நடக்கும்போது உள்ளே புகுந்து, கலாட்டா செய்து தேர்தலில் குழப்பத்தை ஏற்படுத்தித் தேர்தலையே நிறுத்த வாழப்பாடி தரப்பினர் படு பயங்கர திட்டம் வகுத்திருந்தனர். இதை மத்திய, மாநில புலனாய்வு ஏஜென்ஸிகளும் உறுதிபடுத்தின. அதனால்தான் இத்தனை பாதுகாப்பு!" என்று சொன்னார் அவர். "இதெல்லாம் சுத்தப் பொய்!" என்று மறுத்தார் வாழப்பாடியின் தீவிர ஆதரவாளர்களில் ஒருவரான ராஜசேகரன்.

தேர்தல் முடிந்ததும் பத்துப் பதினைந்து இளைஞர்கள் கையில் உருட்டுக் கட்டையுடன் அரங்கத்தை விட்டு வெளியே சென்றதைப் பார்த்தபோது, இவர்கள் போலீஸை மட்டும் நம்பவில்லை என்பது புரிந்தது.

பெரிய கோஷ்டிகளான வாழப்பாடி யாரையும், குமரியையும் ஓரம் கட்டிய தங்கபாலு, காங்கிரஸில் குறுநில மன்னர்களாகவும், பாளையக்காரர்களாகவும் இருந்த பலரை வளைத்துப் போட்டு விட்டார். பிரபு, அன்பரசு, வள்ளல் பெருமான், மணி சங்கர அய்யர் ஆகியோர் தங்கபாலுவோடு பழம் விட்டுக் கொண்டு விட்டனராம். இதில் மிகவும் ஆதாயம் அடைந்தது பிரபு கோஷ்டிதானாம். வெளியில் நின்ற பிரபுவைப் பார்த்துப் பேசி விட்டுத் தங்கபாலு கிளம்பிய சமயம், சுற்றியிருந்த கூட்டம் "பிரபு வாழ்க!" என்று கோஷம் போட்டபோது மனிதர் செட் அப்புடன்தான் வந்திருக்கிறார் என்பது தெரிந்தது. தேர்தலில் மோசடி, தில்லுமுல்லு என்று குற்றம் சாட்டப்படுவதைப் பற்றி தங்கபாலு ஆதரவாளர்கள் கொஞ்சமும் கவலைப்படவில்லை.

"கடந்த இரண்டு மாத காலமும் இரவும், பகலும் தூக்கமில்லாமல் உழைத்தவர் தலைவர். அதன் விளைவாகத்தான் இப்போது மாநிலத் தலைவர் ஆகியிருக்கிறார். எந்தக் கட்சித் தேர்தலில் முறைகேடுகள் நடக்கவில்லை? த.மா.கா. தேர்தலின்போது, மூப்பனார் சொன்ன ஆட்கள்தான் 'தேர்ந்தெடுக்கப்பட்டனர்'. அங்கு என்ன தேர்தல் நடந்தது. தமிழ்நாடு காங்கிரஸைப் பொறுத்த மட்டில் இனி தங்கபாலு அசைக்க முடியாத தலைவர்!" என்று பெருமிதத்துடன் சொன்னார் தங்கபாலுவின் அணுக்கத் தொண்டர் ஒருவர்.

— ப்ரியன்

படம்: ஆர். சௌந்தர்ராஜன்



## யாரைப் போல பிறக்க ஆசை?

**சாலமன் பாப்பையா:**

"மொழிக் குழப்பத்தில் சிக்கிக் கொள்ளாத, இன பேதங்களில் மாட்டிக் கொள்ளாத, உடைமைகளின் உரிமையில் உள்ளம் வீங்க உலா வராத, விஞ்ஞான விந்தை வெளிச்சத்தில் விரும்பிப் பறக்கும் விட்டிலாய் இல்லாத, மானுடத்தை நேசிக்கும் இந்தியத் துறவியாய் அல்லது அவருடைய தொண்டனாய்ப் பிறக்க ஆசை."

"அப்படி நீங்கள் கருதும் துறவி யார்?"

"ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தான்."

— மௌலி



# மந்த்ராவின்

முகத்தில் பனித்துளிகளாய் வியர்வை. "இப்போதுதான் ஜிம்மிலிருந்து வருகிறேன். இன்றிலிருந்து சினிமா தொழிலாளர்கள் ஸ்டிரைக் என்பதால் ஷூட்டிங்கெல்லாம் கேன்சலாகி விட்டதே. அதனால் இன்று கொஞ்சம் ரிலாக்ஸ்டாக ஜிம்முக்குப் போய் வந்தேன்!" என்றார் தமது மந்திரக் குரலில். கூடவே சிரிப்பு.

"ஜிம் மாத்திரம்தானா? 'டயடிங்'கும் உண்டா?"

"டயடிங்கா? அசைவம் இல்லாமல் சாப்பிடவே பிடிக்காது!" என்றார். அதே சிரிப்பு; இனிமை.

"இத்தனை இனிமையான குரலை வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அப்புறம் எதற்காக பிரியம் படத்தில் டப்பிங் குரல்?"

"இப்போது ரிலீஸ் ஆகியிருக்கும் லவ் டுடே படத்தில் எனது சொந்தக் குரலில்தான் பேசியிருக்கிறேன்!" என்றார் சந்தோஷத்துடன்.

"பிரியத்தில் கதாநாயகியாக நடித்த நீங்கள் லவ் டுடேயில் சுவலட்சுமிக்குத் தூது போகிற மாதிரியான ஒரு கதாபாத்திரத்தில் நடித்திருக்கிறீர்களே..." என்று கொஞ்சம் இழுத்தபடி கேட்டபோது கேள்வியின் அர்த்தத்தைப் புரிந்து கொண்டார் மந்த்ரா.

"நீங்கள் நினைப்பது போல் இல்லை. லவ் டுடே சூப்பர் குட் பிலிம்ஸ் நிறுவனத்தாரின் படம் என்பதால் கதையைக் கேட்காமலேயே ஒப்புக் கொண்டேன். படப்பிடிப்புக்குப் போன பிறகுதான் எனது கேரக்டர் பற்றித் தெரிய வந்தது. ஒப்புக் கொண்ட பிறகு பின்வாங்க முடியுமா? அதனால் நடித்தேன். நான் எதிர்பார்த்த

# மந்த்ரா!

கேரக்டராக இல்லா விட்டாலும் ஏனோதானோவென்று நடிக்கவில்லை. முழுமையான ஈடுபாட்டுடன் தான் நடித்தேன். படம் வெளிவந்த பிறகு எல்லா பத்திரிகைகளும் எனது நடிப்பைப் பாராட்டியே விமர்சனம் செய்திருக்கின்றன. யாரும் எனது கேரக்டர் பற்றிக் குறையே சொல்லவில்லை. எனது நடிப்பு அங்கீகரிக்கப் பட்டதில் எனக்கு ரொம்பவும் சந்தோஷம் தான்!"

"பிரியம் படத்தில் படுகவர்ச்சியாக நடித்தீர்கள் என்றும் முன்பு பத்திரிகைகள் எழுதினவே. அப்போது எப்படி உணர்ந்தீர்கள்?"

"பிரியம் படத்தில் மாடர்ன் டிரஸ்களில் கவர்ச்சியாக நடித்தேன் என்பது உண்மை தான். ஆனால் படுகவர்ச்சியாகவோ, ஆபாசமாகவோ அல்ல. கதைப்படி நானும் அருண் குமாரும் காதலர்கள். வீட்டை விட்டு வெளியேறி சிட்டுக்களைப் போலச் சுற்றித் திரிபவர்கள். அதனால் காதலர்களின் நெருக்கத்தைக் காட்டுவதற்கான சில காட்சிகளைத் தவிர்க்க முடியவில்லை. அதுவுமில்லாமல் பிரியம் எனது முதல் படம். நான் இப்படித்தான் நடிப்பேன்; அப்படித்தான் நடிப்பேன் என்றெல்லாம் கண்டிஷன் போட முடியாது. டைரக்டர் சொல்கிறபடிதானே நடிக்க முடியும்!" என்று சிரித்தார் மந்த்ரா.

"ஆமாம், உங்கள் நிஜப் பெயர் என்ன மந்த்ரா?"

"விஜி என்கிற விஜயா. பிரியம் பட டைரக்டர், விஜயா என்ற பெயர் ஏற்கெனவே பிரபலமாகி விட்டதால் பெயரை மாற்ற வேண்டும் என்றார். அவர் ராகவேந்திரர் பக்தர் என்பதால் மந்திராலயம் நினைவாக மந்த்ரா என்று பெயர் வைத்தார். ராகவேந்திரரின் அருளோ என்னவோ, அந்தப் பெயர் நியூமராலஜிப்படியும் எனக்குச் சிறப்பாக அமைந்து விட்டது!" என்று மறுபடியும் சிரித்த மந்த்ராவின் பூர்வீகம் தெலுங்கு தேசம் தான். என்றாலும் இவர் பிறந்து வளர்ந்து பத் தாம் வகுப்பு வரை படித்தது எல்லாம் சென்னையில்தான்.

இவருடைய அப்பா வெற்றிலை - பாக்குப் போடும் பழக்கம் உள்ளவர். அதனால் அடிக்கடி வெற்றிலை-பாக்குக் கடைக்குச் செல்வார். வெற்றிலையை ரசித்து மென்றபடி அங்கேயே சிறிது நேரம் நிற்பதும் உண்டு. இதைக் கண்ட பத்திரிகையாளர் ஒருவர், தீர விசாரிக்காமல் இவரது அப்பா வெற்றிலை பாக்குக் கடை வைத்திருப்பதாக எழுதி விட்டாராம்.

தெலுங்கிலும் பிஸியாக இருக்கும் மந்த்ரா, மிதுன் சக்கரவர்த்தியுடன் நடித்த இந்திப் படம் ஒன்றும் வெளிவரத் தயாராயிருக்கிறதாம். இப்போது தமிழில் நடித்துக் கொண்டிருக்கும் படம் 'தேடினேன் வந்தது.' ஜோடி? பிரபு.

"இந்தப் படத்தின் அவுட்டோருக்காக அண்மையில் குலுமணாலிக்குப் போய் வந்தது மறக்க முடியாததாகி விட்டது!" என்றார் மந்த்ரா.

"அப்படியென்ன விசேஷம்?"

"இங்கே வெயில் மண்டையைப் பிளக்

கிறதா இல்லையா? இந்த நிலையில் குலு மணாலி என்றதும் ஊட்டி, கொடைக்கானல் மாதிரி அருமையான சீதோஷ்ண நிலையில் ஜில்லென்று இருந்து விட்டு வரலாம் என்று சந்தோஷத்துடன் கிளம்பினேன். அங்கு போன பிறகுதான் தெரிந்தது அங்கே ஜில்லென்ற சீதோஷ்ண நிலை இல்லாமல், ஜில்லோ ஜில் லென்று பனிக்கட்டிகள் விழுந்து கொண்டிருக் கிற விஷயம். குளிரில் விறைத்துப் போனேன். ஒரே சமயத்தில் ஒருபுறம் காய்ச்சி எடுக்கிற வெயில்; இன்னொரு இடத்தில் இப்படியொரு பனிமழையா! கடவுளின் படைப்பை எண்ணி வியந்து போனேன்! அப்புறம் இன்னொன்றை யும் மறக்க முடியாது!" என்று சிரித்துப் புதிர் போட்டவர், மறுபடியும் தொடர்ந்தார்.

"ஒருமுறை காரில் வந்து கொண்டிருந்த போது, ஆவடிக்குப் பக்கத்தில் அது ரிப்பேராகி விட்டது. டாக்ஸி ஏதும் அங்கே கிடைக்கிற வழியாய்த் தெரியவில்லை. என்ன செய்வது என்று யோசித்தபோது, பக்கத்தில்தான் எலக்ட்ரிக் டிரெயின் ஸ்டேஷன் என்பதால் விடுவிடுவென்று போய் ரயிலில் ஏறி விட் டேன். ரசிகர்கள் மொய்த்துக் கொண்டு விட்டார்கள். அவர்கள் அத்தனை பேருக்கும் ஆட்டோகிராப் போட்டுத் தருவதற்குள் கையே வலி கண்டு போய் விட்டது. என்றாலும் அந்த ரசிகர்களின் அன்புக்கு முன்னால் கை வலி எம்மாத்திரம்?" என்று மீண்டும் சிரித்தார்.

"அதென்ன மந்த்ரா, மூச்சு விடுவது மாதிரி நொடிக்கு நொடி சிரித்தபடியே இருக்கிறீர்கள்?"

"ஏன், என் சிரிப்புப் பிடிக்கவில்லையா?" - மறுபடியும் சிரிப்பு.

"சேச்சே! அப்படியில்லை."

"சிரிப்பது நல்லதுதானே! டாக்டர்கள் கூடச் சொல்கிறார்களே!... அதென்னவோ சிரிப்பு என்னோடு இயற்கையாகவே ஒட்டிக் கொண்டு விட்டது. ஆனாலும் நான் அழுகிற சந்தர்ப்பங்களும் உண்டு!" என்றார் சோகமாக.

"ஐயய்யோ! அப்படியென்ன சந்தர்ப்பங்கள்?"

"கொடைக்கானல் பஸ் விபத்தில் பலர் பலி யான செய்தியை டெலிவிஷனில் பார்த்த போது என்னையறியாமலேயே அழுகை வந்து விட்டது. சமீபத்தில் தஞ்சைப் பெரிய கோயிலில் ஏற்பட்ட தீ விபத்தில் பலர் பலி யான செய்தியைப் பார்த்தபோதும் அழுது விட்டேன்! அதே போல இப்போது அடிக்கடி நடக்கும் ஜாதிக்கலவரங்கள்... உயிரிழப்புகள்... இப்போது நினைத்தாலும் மனசு கஷ்டப்படு கிறது!" என்றார் மறுபடியும் சோகமாக.

மந்த்ரா கருத்துக்கு மாற்றுக் கருத்தும் இருக்க முடியுமா என்ன?

— ஈஸ்வர்தாஸ்

வண்ணப்படம் : பிரவீண்குமார்

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

# இலக்கிய மலர்; இடக்கான விலை!



●● அக்டோபர், நவம்பரில் மழை, வெள்ளத்தின்போது 96-97 நிலவரி ரத்து செய்யப்படும் என்றும், கூட் டுறவு கடன்கள் மத்திய காலக் கடன் களாக மாற்றப்படும் என்றும் தஞ்சை, நாகை, திருவாரூர் மாவட்ட விவசாயி களுக்கு அரசு தனது அமைச்சர்கள் மூலம் உறுதி மொழி அளித்தது. ஆனால் தற்போது கட்டாயப்படுத்தி நிலவரி வசூலித்து விட்டார் கள். கூட்டுறவுக் கடன்களையும் வசூலித்து வருகிறார்கள். போதாக்குறைக்கு நெல்விலை நிர்ணயம் செய்து கட்டாயக் கொள்முதல் வேறு. தனியார் கொள்முதல் நடந்திருந்தால் மூட்டைக்கு ஐம்பது ரூபாயாவது அதிகம் கிடைத்திருக்கும். மற்ற தொழில்களிலெல்லாம் சுதந்தரப் பொருளாதாரம்; விவசாயத்தில் மட்டும் கட்டுப்பாடா?

மேலப்பாலையூர், சுமாரி

●● பி.பி.சி. தமிழோசை வானொலியில் காஷ் மீரைக் குறிப்பிடும்போது "இந்தியக் கட்டுப்பாட்டில் உள்ள காஷ்மீர் மாநிலத்தில்" என்றே குறிப்பிடுகிறார் கள். நமது வெளியுறவுத்துறை உடனே நடவடிக்கை எடுத்து "இந்தி யாவின் காஷ்மீர் மாநிலத்தில்" என்று இனி ஒலிபரப்பும்படி செய்ய வேண் டும்.

மன்னார்குடி, டி. வரதன்.

●● தமிழக அரசின் பத்திரிகையான "தமிழரசு" இலக்கியமலர் வெளியிட்டு இருக்கிறது. பிரசாரவாடை இன்றி தரமான தயாரிப்பில் கனமான மலர். சுஜாதா, இரா. முருகன், பாலகுமாரன் போன்ற சிலர் இடம் பெறாதது ஒரு குறை என்றாலும் இன்றைய முன்னணி எழுத்தாளர்கள் பலரும் எழுதியுள்ளனர். இந்தப் புத்தகத்தை சேலத்தில் ஒரு கடையில் வாங்கினேன். ரூ.10 என்ற விலைக் குறிப்புக்குப் பக்கத்தில் ஸ்டிக்கர் ஒட்டி ரூ.15 என்று எழுதியிருந்தது. கேட்டால் "பதினைஞ்சு ரூபாய் தான் விலை" என்று அடித்துச் சொன்னார் கடைக்காரர். அப்படியென்றால் முதலில் ரூ.10 என்று விலை அச்சிடுவானேன்? இந்தக் குழப்பத்தை அரசு நிச்சயம் தவிர்த்திருக்கலாம்.

கோவை, லாவண்யா.

# சசிகலா வரவு: பின்வாங்கும் ம.தி.மு.க.!

சசிகலா - போயஸ்தோட்டத்துக்குள் மீண்டும் புகுந்தது, மிச்சம் மீதி இருக்கும் அ.தி.மு.க.வில் என்ன விளைவுகளை ஏற்படுத்தப் போகிறது என்பது வரும் நாட்களில் தெரிய வரும். இதற்கிடையில், அ.தி.மு.க.வுடன் நெருங்கி வந்த ம.தி.மு.க, சசிகலா விவகாரத்தால், தங்கள் நிலையை மாற்றிக் கொள்ள நினைக்கிறதாம்.

"அரசியல் ரீதியாக ஜெயலலிதா வழக்குகளைச் சந்தித்து, தூய்மையாகவோ அல்லது தண்டனை பெற்றோ வெளிவருவது ஒரு பக்கம் இருக்கட்டும். சசிகலாவின் மீது தமிழக மக்கள் மிகுந்த வெறுப்புடன் இருக்கிறார்கள். அவரை மீண்டும் போயஸ்தோட்டத்துக்குள் சேர்த்துக் கொண்ட நிலையில், தேர்தலின்போது தோழி சகிதம் சுற்றி வருவாரேயானால் ஜெயலலிதாவை மட்டுமல்ல; எங்களையும் மீண்டும் மக்கள் புறக்கணித்து விடுவார்கள்" என்கிறார் ம.தி.மு.க. பிரமுகர் ஒருவர்.

அ.தி.மு.க.வுடன் உறவு என்றவுடன் ஆர்வத்துடன் இருந்த ம.தி.மு.க. தொண்டர்கள் இப்போது சற்று குழம்பி நிற்கிறார்கள். ஆங்காங்கே, சிற்சில (உதாரணத்துக்கு நெல்லையில் நடக்கும் வார்டு இடைத்தேர்தல்) இடங்களில் இரண்டு கட்சித் தொண்டர்களும் இணைந்து வேலை செய்தாலும், சசிகலா விவகாரத்தால் தலைமை வேறு மாதிரி முடிவு எடுக்குமோ என்று கவலை தெரிவிக்கிறார்கள். எல். கணேசன், பொன். முத்துராமலிங்கம், கே.எஸ். ராதாகிருஷ்ணன் மலர் மன்னன் போன்ற கூட்டணிக்கு ஓடியாடி உழைத்த ம.தி.மு.க. தளபதிகள் இப்போது சற்று சோர்வாக இருக்கிறார்கள்.

சசிகலா விவகாரத்தில் தங்கள் அதிருப்தியை (வீர) மணியோசையாகப் போயஸ்தோட்டத்துக்கும் தெரிவித்திருக்கிறார்கள். ஆனால் பத்திரிகையாளர்களிடம் வெளிப்படையாகப் பேசும்போது, ஜெ- சசியின் புதுப்பிக்கப்பட்ட கூட்டணியைப் பற்றி கருத்துத் தெரிவிக்கத் தயங்குகிறார்கள். இதற்கிடையில் வை.கோ. இந்த விஷயத்தில் தமது சொந்தக் கருத்து எதையும் தெரிவிக்காமல் மௌனம் சாதித்து வருகிறார். "தேர்தல் வரும் சமயத்தில், சூழ்நிலைக்குத் தக்கவாறு முடிவெடுத்தால் மக்கள் மத்தியில் ம.தி.மு.க.வின் பெயருக்கு பாதிப்பு ஏற்படாமல் தப்பிக்கலாம்" என்பது அவர் கருத்தாம்.



• முதல்வர் குடும்பத்திலிருந்து அரசியலில் ஒரு புதிய முகம் வந்திருக்கிறார். மு.க. முத்து, மு.க. அழகிரி, மு.க. ஸ்டாலின் இவர்களைத் தொடர்ந்து வந்திருப்பவர் மு.க.மு. அறிவுநிதி. முத்துவின் பையன்; கலைஞரின் பேரன். சமீபத்தில் அடையாறு பகுதியில் இவர் ஒரு கல்யாணத்தில் கலந்து கொண்டபோது "வருக; வருக!" என்று போஸ்டர் போட்டு அசத்தி விட்டார்கள் சில உடன்பிறப்புகள்!

— தில்லப்பா

## மும்பை மசாலா

### அண்ணா பக்த ராஜ்!

அரசு திட்டமான "ஸஹாரா ப்ராஜக்ட்" மீதான குற்றப்பத்திரிகையை அண்ணா தயாரிப்பதாகக் காற்று வாக்கில் செய்தி வர, உஷாராகிவிட்டார் தாக்கரே! 'காய்' விட்டிருந்த அண்ணா ஹசாரேவுடன் 'பழம் விடு தூது'க்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார் ராஜ். சாதுப்பிள்ளை 'உதவ்'வை அனுப்பாமல் முரட்டு மருமகன் ராஜை அனுப்பியதில் விஷயமில்லாமலில்லை; ஷிர்டி தேர்தல் பிரசாரத்தின்போது ராஜ், அண்ணாவை மோசமாகத் தாக்கிப் பேச, அண்ணா மனசு ஏகமாகப் புண்பட்டு விட்டது. அதற்கு மன்னிப்புக் கோருவது, ஸீனியர் தாக்கரேயுடன் சமரசம் செய்வது என்ற டூ-இன்-ஒன் காரணமாகத்தான்! ராலேகான் ஸித்தி கிராமத்தில், அண்ணா தங்கியிருக்கும் கோயிலுக்குச் சென்றார் ராஜ். அங்கிருந்த 'ராம பக்த ஹனுமான்' கூட 'வினயத்தில்' ராஜிடம் பாடம் கேட்க வேண்டும் - அப்படி ஒரு பவ்யம்! பிய்த்து உதறிவிட்டார் ராஜ். பலன்? "ஊழலை எதிர்த்துப் போராடுவேன்; ஆனால் தாக்கரேவை எதிர்த்து அல்ல! ஏனென்றால் அவரும் ஊழலை எதிர்ப்பவர்தான்!" என்று அறிவித்து விட்டார் அண்ணா!" ஜெய் அண்ணா பக்த ராஜ்!

### ஃபீசைக் கட்டிப் பார்

பல மும்பை பெற்றோர்களுக்கு, கல்யாணம் பண்ணி விட்டையும் கட்டி விடலாம் போலிருக்கிறது... இந்த பள்ளிக்கூடக் கட்டணங்களின் பயங்கரத்தை நினைத்தால்! பள்ளிக் காற்றை சுவாசிப்பதற்கும், பள்ளித் தண்ணீரைக் குடிப்பதற்கும்கூட ஃபீஸ் உண்டு போலும்! இல்லாவிட்டால், ஒரு வருட ஸ்கூல் ஃபீஸ் ரூ. 8, 365! (ப்ரைமரிக்கு). அதையும் ஒரே தவணையில், கொஞ்சம் ஸ்கூல் பெயரிலும். கொஞ்சம் ஒரு ட்ரஸ்ட் பெயரிலுமாகக் கட்ட வேண்டுமென்று அந்தேரியிலுள்ள விஸன்ஜி அகாதமிக்காரர்கள் அறிவித்தபோது பொறுத்தது போதும் எனப் பொங்கி எழுந்து விட்டனர். உடனடியாகப் பெற்றோர் சங்கம் ஒன்றைத் துவக்கி கோர்ட்டுக்குச் சென்று, ஃபீசை பாதியாகக் குறைத்து விட்டனர். இப்போது இந்த இயக்கம் பள்ளி நிர்வாகத்தின் ஓர் அங்கமாக அங்கீகாரம் பெற போராடி வருகிறார்கள். அண்மையில்தான் தாணாவில், மூன்று பள்ளிகளுக்கு 1.8 கோடி ஃபீஸை திருப்பித்தர கோர்ட் உத்தரவிட்டது! மும்பைக்காரர்கள் விழித்துக் கொண்டு விட்டார்கள்; சென்னைவாசிகள் சிலிர்த்தெழுவது எப்போது?

### அடி மேல் அடி

"மனிதன் இறந்த பிறகுதானே மீண்டும் பிறக்கிறான்? வாழ்க்கைச் சக்கரத்தில் பிறப்பு, இறப்பு எல்லாம் ஒன்றுதான்! இரண்டையும் சம நோக்குடன் பார்க்கக் கற்றுக் கொள்ளுங்கள்!" - இந்த உயர் தத்துவத்தை உதிர்த்தது தத்துவவாதியோ மதத் தலைவரோ அல்ல! சாதாரண முனிசிபாலிடி க்ளார்க்! மும்பை காலேஜ் ஒன்றில் லெக்சரராகப் பணிபுரியும் பூஷன் ஷான்பாக், தமக்கு முதல் (பெண்) குழந்தை பிறந்ததும், பிறப்பை ரெஜிஸ்தர் செய்யச் சென்றபோது, அவருக்கு அளிக்கப்பட்டது இறப்பு விண்ணப்பங்கள்; 'இறப்பு' என்ற இடங்களில் 'பிறப்பு' என்று எழுதி 'அட்ஜஸ்ட்' செய்யுமாறு பணிக்கப்பட்டார்! துணுக்குற்று, இறந்தவரின் வயது, காரணம் போன்ற அமங்கலமான கேள்விகளால் அலைக்கழிக்கப்பட்டு, அருமை மகளின் பிறப்பு விவரங்களைத் தனியாக ஒரு தாளில் எழுதித் தரவோ, அல்லது அடுத்த வார்ட் ஆபீசிலிருந்து விண்ணப்பங்கள் வரும் வரை காத்திருக்கவோ தாம் தயாராக இருப்பதைக் கூறினார். எனினும் எங்குமே விண்ணப்பங்கள். 'ஸ்டாக்' இல்லை என்ற குண்டைத் தூக்கிப் போட்டு விட்டு, உபரியாக, மேற்சொன்ன தத்துவத்தையும் உதிர்த்தார். சம்பந்தப்பட்ட கிளார்க்!



# நமது கலாசாரம்!

## என்கௌண்டருக்கு இல்லையா என்கௌண்டர்

எம்.டி.வி., 'வி' சானல் போன்றவற்றில் ஒளிபரப்பப்படும் பாடல் காட்சிகளின் அசிங்கமான ஆட்டங்களைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். இது தவிர மும்பை காலேஜ்களின் இளசுகளுக்கென்றே "க்ளோசப் என்கௌண்டர்" என்று 'வி' சேனலில் ஒரு நிகழ்ச்சி! திரையின் ஒரு பக்கம் ஓர் இளைஞன், மறுபக்கம் மூன்று இளைஞிகள். இவர் கேட்கும் கேள்விகளுக்கு அவர்கள் அளிக்கும் விடைகளைப் பொறுத்து, இவர் ஒரு குமரியைத் தேர்ந்தெடுக்க, போட்டி முடிவில் அவர்கள் ஒருவரை ஒருவர் சந்தித்து (கட்டித், தழுவி முத்தமிட்டு etc etc...) நிகழ்ச்சியைப் ஸ்பான்சர் செய்யும் ஓட்டலில் டின்னர் சாப்பிட்டு, 'டேட்'டிங் செய்யலாம்! முதல் ரவுண்டுகளில், அபத்தமான கேள்விகளும், அசட்டுத்தனமான பதில்களும்; கடைசியில், கண், காது, மூக்கு என்று உறுப்புகள் வரையப்பட்ட ஒரு சக்கரம் சுழலும்; அது எந்த உறுப்பில் நிற்கிறதோ அதை இவர்கள் காட்ட வேண்டும். இந்தப் பெண்கள் காட்டியது தொப்புள் பகுதியை! தொபுகடீர் என்று நம் கலாசாரமும் பண்பும் குப்புற விழுந்து தற்கொலை செய்து கொள்ள, தனக்குப் பிடித்த தொப்புளழகியுடன் இளைஞர் டேட்டிங்குக்கு புறப்பட்டு விட்டார். பூஜா பட்டுக்காக கதறியழுத 'மஹிளா மஞ்ச்'கள், பூஜைக்குரிய இந்த மலர்கள் சீரழிவதைக் கண்டு மௌனமாயிருப்பது ஏன்?

மும்பையிலிருந்து: ஜெயஸ்ரீ ராஜ்

# தஞ்சை தீ விபத்து :

# என்னதான் நடந்தது?

இரவு (7.6.97) சுமார் 7.50 மணி. திருப்பணிக் குழுவினர் என்கிற பெயரில் தஞ்சைப் பெரிய கோவிலின் உட்புறம் சிலர் வாண வேடிக்கைகளை வெடித்துக் கொண்டிருந்தனர். அருகிலேயே யாகசாலை. "இங்கே வெடி போடாதீர்கள்!" என்று இந்து அறநிலையத் துறை நிர்வாக அதிகாரியொருவர் அவர்களிடம் சொல்லிப் பார்த்தார். யாரும் கேட்கவில்லை!

'அவுட்' என்று சொல்லப்படும் அந்த வாண வேடிக்கைகளில் ஒரு சிறப்பு. வெடியில் நெருப்பு வைத்ததும் மேலே சென்று பெரிதாக ஒரு வெடி வெடித்துச் சிதறும். வண்ண வண்ணமாகச் சிதறும் அந்தப் பூக்கள் ஒவ்வொன்றும் மறுபடியும் ஆகாயத்தில் வெடிக்கும். இப்படிப் பல்வேறு தினுசான வாண வேடிக்கை வெடிகள்!

இப்படிப்பட்டதொரு வெடி மேலே சென்று வெடித்ததும் அதிலிருந்து சிதறிய நெருப்புப் பொறியொன்று யாகசாலைப் பந்தலில் விழுந்து தீப்பிடிக்க ஆரம்பித்தது. காற்றும் சேர்ந்து கொள்ள தீ கொழுந்து விட்டு எரியத் தொடங்கிவிட்டது.

இதைப் பார்த்த மக்கள் அலறியடித்துக் கொண்டு வெளியே ஓட ஆரம்பித்தனர். உள்ளே நிறுத்தப் பட்டிருந்த (எதற்காக அனுமதித்தார்களோ?) கார்களும் வெளியே வர ஆரம்பித்தன. உள்ளே கட்டப்பட்டிருந்த மூன்று யானைகளில் ஒன்று எப்படியோ கட்டவிழ்த்துக் கொண்டு கூட்டத்தில் நுழைய முற்பட ஒரே களேபரம், கூக்குரல், நெரிசல், மிதிபடல், உயிர்ச் சேதம் என்று நிலைமை மிக மோசமாகத் தொடங்கி விட்டது. நல்ல வேளை யாகக் கட்டவிழ்த்துக் கொண்ட யானையைப் பிடித்து விட்டார்கள். இல்லையென்றால் இன்னும் படுமோசமாகியிருந்திருக்கும்.

மரண பயத்தோடு மக்கள் வெளியேறிக் கொண்டிருந்தபோது, வெளியிலிருந்த சமூக விரோதிகள் சிலர், வெளியேறிய பெண்களிடமிருந்து நகைகளைப் பறிக்க ஆரம்பித்தது தமிழினத்தின் மனிதாபிமானத்துக்கே மரண அடி!

யாகசாலை என்றால் நெருப்பு இருக்கும். பந்தல் என்பது தீப்பிடித்தால் எரிகிற நிலையில்தான் இருக்கும். இந்த யதார்த்தத்தில் என்ன செய்வார்கள். தீயணைப்பதற்கான முன்னெச்சரிக்கையாக மணல் வாளிகளை வைத்திருப்பார்கள்.

இங்கு அதெல்லாம் இல்லை. அங்கே நிறுத்தப்பட்டிருந்த மூன்று தீயணைப்பு வண்டிகளுமே நெருப்புப் பிடித்த பிறகுதான் தண்ணீரை நிரப்பிக் கொண்டு வரப் புறப்பட்டுப் போனதாகப் பலரும் சொல்கிறார்கள். இதையெல்லாம் யாருமே கவனிக்காதது ஏன் என்பதுதான் தஞ்சை மக்களின் மனக் குமுறல். தகுந்த முன்னெச்சரிக்கையோடு அதிகாரிகள் செயல்பட்டிருந்தால், விபத்து இந்த அளவுக்கு மோசமாக மனித உயிர்களைப் பலி வாங்கியிருக்காது என்றே பலரும் கருதுகிறார்கள்.

சிவாலயத்தின்



• எரிந்து போன யாகசாலை....

படம் : ஆர். சௌந்தர்ராஜன்

குடமுழுக்கு என்பது எப்படி நடக்க வேண்டும்? விவரமறிந்தவர்கள் சொல்வது :

தஞ்சைப் பெருவுடையார் கோயிலை கி.பி. 1003 க்கும் 1009 க்கும் இடையில் முதலாம் ராஜ ராஜன் கட்டினான். ஏற்கெனவே இருந்த சிறிய சிவன் கோயிலைத் தான் அவன் பெரிதாகக் கட்டினான் என்றும் சில வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் கருது கிறார்கள்.

கோயிலைக் கட்டி முடித்த முதலாம் ராஜராஜன் 180 நாட்கள் ஆயுட் கால ஹோமம் நடத்தியிருக்கிறான். கோயில் கலசத்தில் ஐம்பொன், நவமணிகள், நவ தானியங்கள் என்று ஒவ்வொன்றையும் ஒவ்வொரு மரக்கால் அளவுக்குப் போட்டு நிரப்பியிருப்பதாகவும் சொல்கிறார்கள். கோ தானம், பூ தானம், புத்திர தானம், வஸ்திர தானம், பொன் தானம் செய்திருக்கிறான். அப்போது நீர்ப் பூ, நிலப் பூ, செடிப் பூ, கொடிப் பூ, பொற் பூ (மஞ்சன் கொன்றை) போன்ற பூக்களையே பயன்படுத்தியிருக்கிறார்கள்.

யாகத்தில் ஆல், அரசு, புரசு, மா, அத்தி போன்றவற்றின் சுள்ளிகளை வைத்தே அக்னியை எரிய விட வேண்டும் என்கிறார்கள். யாகத்தில் செயற்கையாக அக்னியைப் பற்ற வைக்கக் கூடாதாம். மந்திர உச்சாடனம் செய்கிறபோது அதுவாகவே அக்னி பற்றிக் கொண்டு எரிய வேண்டுமாம்! முதலாம் ராஜராஜன் நடத்திய குடமுழுக்கு இப்படித் தான் நடந்தது என்கிறார்கள்.

அப்புறம், ஆகம விதிப்படி இறைவனின் பார்வை குளத்தின் மீது பட வேண்டும் என்கிறார்கள். பெரிய கோவிலின் சந்நிதிக்கும் நந்திக்கும் இடையில் 185 கெஜ தூரம். நந்திக் கும் குளத்துக்கும் இடைப்பட்ட தூரமும் 185 கெஜம். குளம் இப்போது இல்லை. அந்த இடம் தூர்க்கப்பட்டு, ராஜா மிராஸ்தார் மருத்துவமனை வளாகமாக மாற்றப்பட்டு விட்டது. இது ஆகம விதிகளுக்கு முரணானது. மறுபடியும் குளம் தோண்டப்பட வேண்டும் என்பதே பல பெரியவர்களின் கருத்து.

தஞ்சையிலிருந்து :

**ஆரியன்ஸ்**

மத்திய அமைச்சரவையில் இடம் பெற்று, பதவிப் பிரமாணம் முடிந்த கையோடு சென்னை வந்த ஜெயந்தி நடராஜனுக்கு, ஏர்போர்ட்டில் ஆர்ப்பாட்டமான வரவேற்பு. நாளிதழ்களில் முழுப்பக்க விளம்பரங்கள். நகரம் எங்கும் பெரிய பெரிய வண்ணப் போஸ்டர்கள்.... என்ன, மீண்டும் ஜெ. கலாசாரம் தமிழ் நாட்டில் தலைதூக்க ஆரம்பிக்கிறதா என்று நமக்கு எண்ணத் தோன்றியது. அவரையே சந்தித்துப் பேசினோம்...



# 'ஜெ. கலாசாரம்'தான் ஜெயந்தி கலாசாரமா?

*"உங்கள் தாத்தா பக்தவத்சலத்துக்குப் பிறகு ஒரு தலைமுறை இடைவெளிக்குப் பின் அரசியலுக்கு வந்தவர் நீங்கள். அரசியலுக்கு வரும் ஆர்வம் உங்களுக்கு எப்படி ஏற் பட்டது?"*

"என் அம்மா பிறந்த போது, என்னுடைய தாத்தா (பக்தவத்சலம்) ஜெயிலில் இருந்தார். என் பாட்டியின் அப்பா, சுதந்திரப் போராட்ட வீரர். எனக்கு சிறு வயதில் யாரும் காக்கா கதை, குருவிக் கதை சொன்னதில்லை. நான்

## — ஜெயந்தி நடராஜன் சூடான பேட்டி!

கேட்டதெல்லாம் சுதந்திரப் போராட்டம் பற்றிய பேச்சுக்கள்தான். அதனால் நாட்டுப் பற்று என்பது எனது ரத்தத்தில் ஊறின ஒரு சமாசாரமாகிவிட்டது. இதனால் வக்கீலாய் பிராக்டிஸ் செய்த நான், அரசியலுக்கு வந்தது ஒன்றும் ஆச்சரியமான விஷயமில்லையே!"

*"நீங்கள் மத்திய அமைச்சரவையில் இடம் பெறுவீர்கள் என்று எதிர்பார்த்தீர்களா?"*

"இல்லை. அரசியலில் இருக்கும் எவருக்கும் அமைச்சராக வேண்டும் என்கிற ஆசை இருக்குமில்லையா? அதுபோலத்தான் எனக்கும் ஆசை இருந்தது. ஆனால் எப்போது அது நிறைவேறும் என்ற ஐடியா இல்லை. இப்போது திடீரென்று அந்த வாய்ப்புக் கிடைத்ததில் எனக்கு ரொம்ப சந்தோஷம்."

*"அமைச்சராகப் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொண்டபோது எப்படி உணர்ந்தீர்கள்?"*

"என்னிடம், மிகப் பெரியதொரு பொறுப்பு கொடுக்கப்பட்டிருப்பதாய் உணர்ந்தேன். அதைச் சிறப்பான முறையில் செய்ய முடியும் என்கிற தன்னம்பிக்கையும் எனக்கு உண்டு என்றாலும், பதவியை ஒரு இனிய சுமையாகவே உணர்கிறேன்."

*"நீங்கள் விரும்பியபடி உங்களுக்கு இலாகா கிடைத்திருக்கிறதா?"*

(சற்று யோசித்து விட்டு) "ம்... தலைவரிடம் (மூப்பனார்) எனக்கு என்ன இலாகா தரப்பட்டாலும் பரவாயில்லை. ஆனால் அது மக்களுடன் நேரடியாகச் சம்பந்தப்பட்ட ஒன்றாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன் என்று மட்டும் கேட்டுக் கொண்டேன்."

*"பதவிப் பிரமாணம் முடிந்து, இலாகா அறிவிப்பு வருகிறவரையிலான இடைப்பட்ட சில நாட்களில் உங்கள் மன நிலை எப்படி இருந்தது?"*

(சிரித்து விட்டு) "டென்ஷனாக இருந்தது. என்ன இலாகா கொடுக்கப் போகிறார்களோ என்ற டென்ஷன் இல்லை; என் பையனின் அட்மிஷன் டென்ஷன்!"

*"சிவில் விமானப் போக்குவரத்து, பாராளுமன்ற விவகார இணை அமைச்சர் என்கிற முறையில் என்ன செய்யத் திட்டமிட்டிருக்கிறீர்கள்?"*

"எனக்குரிய அலுவலகம் சென்றேன். அதிகாரிகளைச் சந்தித்துப் பேசியிருக்கிறேன். இலாகாக்கள் பற்றிய விவரங்களை அறிந்து கொண்டிருக்கிறேன். இன்னும் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் நிறைய இருக்கின்றன. ஆனாலும், பயணிகளின் பாதுகாப்பு உள்ளிட்ட பல்வேறு விஷயங்களிலும் தனிக் கவனம் செலுத்த விரும்புகிறேன்."

*"தமிழ்நாட்டுக்கென்று ஏதாவது பிரத்யேகத் திட்டங்கள் வைத்திருக்கிறீர்களா?"*

"இன்னும் முழுசாய் நான் செட்டில் ஆகவில்லை என்று இப்போதுதானே சொன்னேன்! எப்படியும், தமிழகத்துக்கென்று, நிச்சயம் ஏதாவது பிரத்தியேகமாகச் செய்யத்தான் போகிறேன்."

*"பாராளுமன்றத்தில் இரண்டாம் முறையாய் எம்.பி. யாக இருக்கிறீர்கள்! எம்.பி. என்கிற முறையில் பாராளுமன்றத்தில் உங்கள் பங்*



களிப்பு என்ன?"

"காங்கிரஸ் ஆட்சியின் போதே பெண்கள் சம்பந்தமான சில பிரச்னைகளில் அரசு போதிய கவனம் செலுத்தவில்லை என்று சுட்டிக்காட்டியிருக்கிறேன். வரதட்சணை, கற்பழிப்பு போன்ற குற்றங்களில் தண்டனை பெற்றவர்கள், தேர்தலில் நிற்கத் தடை செய்யும் மசோதா வந்தபோது, அதனை ஆதரித்து, அதன் முக்கியத்துவத்தை வலியுறுத்திப் பேசியது எனக்கு மிகவும் திருப்தியளித்த ஒரு விஷயம். பெண்களுக்கு எங்காவது அநீதி இழைக்கப்பட்டால், அது பற்றி, உறுப்பினர்கள் பாராளுமன்றத்தில் கேள்வி கேட்கும் போது, பெண்கள் நலத்துறை அமைச்சர் பதிலளிப்பார். அது போன்ற சமயங்களில், மற்றெந்த முக்கியமான பிரச்னைகள் குறித்த கேள்விகளுக்கும் உள்துறை அமைச்சரே பதிலளிக்கும்போது, பெண்களுக்கு அநீதி இழைக்கப்படும் போது கேள்வி எழுப்பப்பட்டால் மட்டும் அவர் பதிலளிக்காமல் இருப்பது ஏன்? இதைக் கண்டித்துப் பேசி, உள்துறை அமைச்சரே பதிலளிக்கும்படி செய்திருக்கிறேன்."



**"போக்குவரத்துக் கழகங்களுக்குப் பேர் மாத்தறதைப்பத்தி யோசிக்கறாங்களாமே!"**

**"ஆமாம், 'போக்குவரத்துக் கலகம்'னு வைக்கலாமான்னு யோசிக்கிறாங்க!"**

**— பூங்கோதை கிருஷ்ணராஜ்**

*"வக்கீல் என்ற முறையில் நீங்கள் எடுத்து நடத்தியவற்றில் மறக்க முடியாத ஏதாவது ஒரு வழக்கைப் பற்றிக் கூறுங்களேன்."*

"ஒரு போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர். அவர் கள்ளச்சாராய வியாபாரிகளிடம் மிகவும் ஸ்டிரிக்ட்டாய் நடந்து கொண்ட காரணத்துக்காக, அவர் மீது பொய் கேஸ் போட்டு, முதலில் சஸ்பெண்டு செய்து, பின்னர் டிஸ்மிஸ்ஸும் செய்து விட்டார்கள். அது பற்றி அவர் ஹைகோர்ட்டில் போட்ட கேஸ் டிஸ்மிஸ் ஆனது. அவர் என்னிடம் வந்தார். அவரது கேஸ் சம்பந்தப்பட்ட பேப்பர்களைப் படித்தபோது, அது டிஸ்மிஸ் ஆகிற கேஸ் இல்லை. கேஸ் முறைப்படி கையாளப்படாததால்தான் இந்த முடிவு என்று எனக்குப் புரிந்து விட்டது. தலைமை நீதிபதி முன்பு அப்பீலுக்குப் போனேன். பயங்கர பிஸியான அந்தக் கால கட்டத்தில் இந்த கேஸ் மீது பிரத்யேக கவனம் செலுத்தி, கோர்ட்டில் வாதிட்டேன். இறுதியில், சஸ்பெண்டு ஆனது முதற் கொண்டு, கேஸ் முடியும் வரையிலான பதினைந்து வருடத்துக்குரிய முழு சம்பளமும் கொடுத்து, மறுபடியும் அந்த சப்-இன்ஸ்பெக்டர் வேலைக்கு சேர்த்துக் கொள்ளப்பட்டார்.

"அந்தச் சமயம், தமது மனைவி, வயது முதிர்ந்த தாய் சகிதம் வந்து ஐயாயிரம் ரூபாய் பீஸ் கொடுத்தார் அவர். 'உங்களுக்கு பீஸ் கொடுக்க வசதி இல்லை என்று நீங்கள் சொன்ன பிறகும் நான் இந்தக் கேஸை எடுத்துக் கொண்டது, ஒரு நேர்மையான போலீஸ் அதிகாரிக்கு நியாயம் கிடைக்க வேண்டும் என்பதற்காகத்தான்' என்று கூறி அதை வாங்க மறுத்து விட்டேன். என் காலில் விழ முயன்ற அவரது தாயாரைத் தடுத்து 'நீங்கள் என்னை ஆசிர்வதியுங்கள். எனக்கு அது போதும்' என்று சொல்லி அனுப்பி வைத்தேன்."

*"இத்தனை எளிமையான உங்களுக்கு அமைச்சராகத் தமிழகம் வந்தபோது, ஏன் இத்தனை ஆர்பாட்டமான வரவேற்பு? ஜெயந்தி கலாசாரம், ஜெ. கலாசாரத்தின் தொடக்கமோ என்று எண்ணும்படி செய்து விட்டதே!"*

"எது ஆர்பாட்டம்? நான் என்ன ஜெயலலிதா போல கட்அவுட் வைத்தேனா? எனக்காகப் போக்குவரத்து தடைபட்டதா? மக்களுக்கு ஏதாவது இடைஞ்சல் ஏற்பட்டதா? ஆரம்பம் முதலே நான் தொண்டர்களுடன் நேரடியான தொடர்பு வைத்திருப்பவள். எனக்கு மந்திரி பதவி கிடைத்ததில் அவர்களுக்குச் சந்தோஷம். எனவே, நான் சென்னை வந்த போது, வரவேற்க, விமான நிலையத்தில் மகிழ்ச்சியுடன் கூடினார்கள். அதை ஒரு பெரிய விஷயமாக்க வேண்டாம். அவர்கள் சந்தோஷத்துடன் செய்கிற காரியங்களுக்கு நான் திடீரென்று தடைவிதித்தால், மந்திரியான பின் நான் மாறிவிட்டதாகவும், அவர்களிடமிருந்து விலகிப் போக நினைப்பதாகவும் அவர்கள் நினைத்து விடக் கூடுமல்லவா?"

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

வண்ணப்படங்கள் : **ஆர். சௌந்தர்ராஜன்**

# நாங்கள் லஞ்சம் வாங்கவில்லை; கொடுத்திருக்கிறோம்!

● சட்டவிரோதமாக, இதுவரை தங்கள் சேரிகளில் உள்ள வீடுகளில் மின்சார இணைப்பை வைத்துக் கொண்டிருந்த சுமார் 5 லட்சம் பேருக்கு, தில்லி அரசு முறைப்படுத்தப் போகிறது. இது சட்ட விரோதமான செயல், தண்டிக்க வேண்டும் என்று சொல்லுகிறவர்களிடம், முதல்வர் சாகிப் சிங் வர்மா, "இனி அரசு மின்விநியோகத் துறைக்குப் பத்துக் கோடி ரூபாய் வருமானம் வரும். அதை விடுவானேன்?" என்று சொல்லி விட்டார்!

● பார்லிமெண்ட் சாலையில் உள்ள ரிசர்வ் வங்கியில், புதிய கரன்சி நோட்டுக்களை வாங்கவும், புதிய காயின்களாக மாற்றிக் கொடுக்கவும் நிறையத் தரகர்கள் இருக்கிறார்கள். இத்தனைக்கும் காவலர்கள் நிறையப் பேர் அங்கே இருக்கிறார்கள். 60,70 வயதான இந்தத் தரகர்கள், இவர்களைச் சட்டை செய்வதே இல்லை. அதிலும் பாதிப் பேர் பெண்கள்! க்யூவில் மணிக்கணக்காக நிற்பவர்கள், நின்று கொண்டே இருக்க வேண்டியது தான். 'வயதானவர்களுக்கு இடம் கொடுக்காமல் இருப்பீர்களா?' என்று கேட்டுக் கொண்டே க்யூவில் நுழைந்து கவுண்ட்டருக்கு அருகில் போய் விடுகிறார்கள் இவர்கள்!

● விலை உயர்ந்த மருத்துவக் கருவிகளை இறக்குமதி செய்த ஊழலில், சுமார் 5000 கோடி ரூபாய் கஸ்டம்ஸ் ட்யூட்டியை விழுங்கி ஏப்பம் விட்ட கும்பலின் முக்கிய மூளை என்று கருதப்பட்டவரை மத்திய சுகாதாரத் துறை சஸ்பெண்ட் செய்திருக்கிறது. இவர் மௌலானா ஆசாத் மெடிகல் காலேஜ் டீன், டாக்டர் கே.கே.ஜெயின்! சுகாதாரத் துறை டைரக்டரேட்டில் துணை டைரக்டர் ஜெனரலாக இதற்கு முன் பணியாற்றியவர். தனியார் துறையில் இயங்கும் மருத்துவ நிலையங்கள் சில, தாங்கள் இலவச சிகிச்சை அளிக்கிறதாகக் காரணம் சொல்லி, சுமார் 5000 கோடி ரூபாய் இறக்குமதித் தீர்வையிலிருந்து விலக்குப் பெற்றன. இதில் மத்திய சுகாதாரத்துறை அதிகாரிகளுக்கும் பங்கு உண்டு என்று விசாரணையில் தெரிய வந்தது. 61 மருத்துவமனைகள் இந்த ஊழலைச் செய்திருப்பதாகவும், இதில் 21 மருத்துவமனைகள் கோர்ட்டுக்குப் போயிருப்பதாகவும் தெரிகிறது.

● "ஒரு மின்சார இணைப்புக்கோ, தெருவைச் சுத்தப்படுத்துவதற்கோ, கழிவுநீர் பாதைக்கோ, தொலைபேசி இணைப்புக்கோ- ஏதாவது ஒன்றுக்காக, எதற்காவது லஞ்சம் கொடுத்துத்தான் காரியம் செய்ய முடிகிறது. இல்லை என்று சொல்லி விட முடியாது. நாங்கள் வாங்கியிருக்க மாட்டோம் என்றாலும் கொடுக்காமல் இருந்ததில்லை!"- ஆளுநர்கள் மாநாட்டில் இப்படிச் சொன்னவர் சாதாரணக் குடிமகன் யாருமல்ல; பிரதமர் குஜ்ரால்!

● நமது கிரிக்கெட் அணி தோற்பது பற்றி பந்தயம் கட்டி ஆடும் ஆயிரக்கணக்கான சூதாட்டக்காரர்களுக்கு கோடிக்கணக்கான ரூபாய் ஆதாயம் கிடைக்கும் வகையில், மாட்சுகள் விளையாடியதாகக் கூறப்படும் இந்திய கிரிக்கெட் அணியினர் பற்றி, கிரிக்கெட் கன்ட்ரோல் போர்டு சச்சின் டெண்டுல்கரை விசாரித்திருக்கிறது. அதற்குள், முன்னாள் கிரிக்கெட் வீரரும், டீமின் மானேஜருமான அஜித் வாடேகர், "ஆமாம் இந்தியாவுக்கு வந்ததும் 'ஆட்டக்காரர்கள்' தங்கியிருக்கும் ஓட்டலில் நான் இருந்தபோது அவர்கள் டெலிபோன் பேச்சை ஒட்டுக் கேட்டேன்" என்று அறிக்கை விட்டிருக்கிறார். "இது பொய். சாத்தியமே இல்லை. எலக்ட்ரானிக் எக்ஸ்சேஞ்சுகள் வந்து விட்ட இந்தக் காலத்தில் இது நடவாத காரியம்!" என்று மறுத்திருக்கிறார் தில்லி மாநகர டெலிபோன் துறை மானேஜிங் டைரக்டர் எஸ். ராஜகோபாலன்.

— நியூஸ்வாலா






1997 ஜூன் 22
ஈசுவர ஆனி 8
மலர் : 55
இதழ் : 47

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



# கேசரியின் வெற்றி இனிப்பா? கசப்பா?

தேர்தல் கமிஷனுக்குப் பயந்து, காங்கிரஸ் உட்கட்சித் தேர்தல்களை நடத்தி முடித்து விட்டது. சீதாராம் கேசரி மீண்டும் தலைவராய்த் தேர்வாகியுள்ளார்.

தலைமையில் மாற்றம் இல்லாவிட்டாலும் காங்கிரஸ் கலாசாரத்தில் ஒரு மாற்றம் ஏற்பட்டிருப்பதை கவனிக்க வேண்டும். தலைமைப் பதவிக்கு ஒன்றுக்கு மேற்பட்ட நபர்கள் போட்டியிட்டிருக்கிறார்கள். "நான் தோற்றாலும் பரவாயில்லை; உட்கட்சி ஜனநாயகத்துக்கு மீண்டும் உயிரூட்டிய திருப்தியே எனக்குப் போதும்..." என்கிறார் பைலட். "கேசரி ஜெயிப்பார் என்பது தெரியும். அவருக்கு என் பிரிவினர் முழு ஒத்துழைப்பை அளிக்கத் தயார்..." என்கிறார். இத்தகைய பெருந்தன்மையான வாசகங்கள் காங்கிரஸ் வட்டாரங்களில் வருடக் கணக்காகக் கேட்டறியாதவை!

கட்சித் தலைவர் பதவிக்குப் போட்டியிட்டதன் மூலம் பவாருக்கும் கொஞ்சம் நல்ல பெயர் கிடைத்திருக்கிறது. தலைமையுடன் சதா சமரசம் செய்து போகக் கூடியவர் என்கிற அவரது அவப்பெயர் அழிக்கப்பட்டிருக்கிறது.

இந்த நல்ல திருப்பங்களை காங்கிரஸ் தலைவர் கேசரி முறையாகப் பயன்படுத்திக் கொண்டு, கட்சியை மேலும் பலப்படுத்தி, ஜனநாயக ரீதியில் இயங்கச் செய்யலாம்.

தலைமைக்குப் போட்டியிட்ட மற்ற இரு நபர்களுக்கும் வேறு பொறுப்பான கட்சிப் பதவிகள் அளித்து, அவர்களையும் அவர்களது ஆதரவாளர்களையும் அரவணைத்துப் போவதே




அறிவுடைமை. 'எனக்குப் போட்டியாகத் தேர்தலில் நின்றீர்களா... உங்களைத் தொலைத்து விடுகிறேன்!' என்று வன்ம உணர்வுடன் கேசரி இயங்குவாரானால் அவரது செயல் எதிர்மறை விளைவுகளைத்தான் ஏற்படுத்தும். பைலட்டையும் பவாரையும் ஓரங்கட்டவோ, உப்புப் பெறாத பதவிகளில் உட்கார வைத்து வேடிக்கை பார்க்கவோ முயன்றால், கட்சிக்குள் மீண்டும் குழப்பமும் எதிர்ப்பும் தலையெடுக்கும். பவாருக்கு வெறுப்பேற்றுவதற்காகவே அர்ஜுன் சிங்கை ஊக்கப்படுத்தி ஆதரவு கொடுப்பது உதவாத காரியம். காங்கிரஸ் உட்கட்சிப் பூசல்களை அது நிரந்தரமாக்கும்.

தலைமைப் பதவிக்கு முக்கோணப் போட்டியிருக்குமானால், ஒவ்வொரு வாக்காளரும் தமது இரண்டாவது தேர்வாக ஒரு நபருக்கு வாக்களிக்க வேண்டும் என்பது காங்கிரஸ் கட்சியின் தேர்தல் விதி. இந்த விதியே ஆரோக்கியமான ஜனநாயகக் கோட்பாடுகளின் அடிப்படையில் அமைந்ததுதான்.

விதிகளையும் மரபுகளையும் நேர்மையின் அடிப்படையிலும் ஆரோக்கிய சிந்தனையின் அடிப்படையிலும்தான் வகுக்கிறோம்; உருவாக்குகிறோம். ஆனால் அவற்றைக் கையாளும், பின்பற்றும் மனிதர்களின் மனவளத்தைப் பொறுத்தே அவை பயன்தரும்.

காங்கிரஸ் கட்சியின் எதிர்காலம் கேசரியின் மனவளத்தைப் பொறுத்தே அமையப் போகிறது!

## பெரிய பதவியும் சின்னத்தனங்களும்!

**வி**ளையாட்டு வேட்பாளர்களால் குடியரசுத் தலைவர் தேர்தல் கேலிக் கூத்தாவதைத் தவிர்க்க, தேர்தல் கமிஷன் சில நடவடிக்கைகளை எடுத்துள்ளது. டெபாஸிட் தொகையை உயர்த்தி, முன்மொழிய வேண்டிய நபர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்தி, 'விளையாட்டு' வேட்பாளர்களின் எண்ணிக்கையைக் குறைக்க முனைந்துள்ளது.

இத்தனை நிபந்தனைகளையும் மீறி சில non-serious வேட்பாளர்கள் களத்தில் புகவே செய்வார்கள். அவர்களைப் பொருட்படுத்தாமல் ஒதுக்கிவிடுவது மிகவும் முக்கியம். அதனினும்




முக்கியம், தகுதிக்கு முதலிடம் தருவது.

'சுதந்தரப் பொன்விழா ஆண்டு என்பதால் சுதந்தரப் போராட்ட வீரர் ஒருவர் குடியரசுத் தலைவராகத் தேர்வாவதே பொருத்தம்' என்று ஒரு பக்கம்; தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்தான் ஜனாதிபதியாக வேண்டும் என்று மறுபக்கம்; வட நாட்டவர் பிரதமராக இருந்தால் தென்னாட்டவர் ஜனாதிபதியாயிருக்க வேண்டும் என இன்னொரு பக்கம்; தாழ்த்தப்பட்டவராகவும் இருந்து சுதந்தரப் போராட்ட வீரராகவும் இருந்தால் மிகவும் நல்லது என்று வேறொரு புறம்... இப்படி தலைக்குத் தலை ஒவ்வொரு நபரை மனத்தில் வைத்துக் கொண்டு, அவருக்கேற்பப் பேசுகிறார்கள்.

கே.ஆர். நாராயணனை ஏற்கத் தயாராய் இருப்பவர்கள்கூட அவர் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர் என்பதையே பிரதான காரணமாகக் காட்டுகிறார்களே தவிர, துணை ஜனாதிபதியாக அவர் பெற்ற அனுபவம், அயல்நாட்டுப் பயணங்களில் அவர் வளர்த்த நல்லுறவு, அதனால் வெளியுறவுத் துறையை கவனிக்கும் பிரதமருக்கும் அவருக்கும் இடையே உருவாகக் கூடிய உபயோகமான இணக்கம்... இவை பற்றி யாருமே மதிப்பிட்டுப் பேசக் காணோம்.

கட்சி ரீதியாகவும் ஜாதி ரீதியாகவும் யோசிக்கும் அரசியல் கும்பல்; தள்ளாத வயதிலும் தேவையின்றிப் பதவியில் தொடர விரும்பும் சங்கர் தயாள் சர்மா; சேஷன் போன்ற ஸ்டண்ட் பேர்வழிகள்... இவற்றுக்கிடையே 'தகுதி' பற்றிய சிந்தனை ஓரங்கட்டப்பட்டு விடுகிறது.

ஜாதி, வகுப்பு, வட மாநிலம், தென்மாநிலம் போன்ற பேதங்களைக் குடியரசுத் தலைவர் தேர்தலில் புகவிடுவதே அபாயம், அநாகரிகம். அவற்றையெல்லாம் மறந்துவிட்டு, ஒரு தகுதியுள்ள நபர் என்பதற்காக கே.ஆர். நாராயணனுக்கு ஆதரவு அளிக்கப்பட வேண்டும். துணை ஜனாதிபதியை குடியரசுத் தலைவராக்கும் ஓர் ஆரோக்கியமான மரபு தொடர்வதற்கு வழி காண வேண்டும்.

பள்ளிக்கூட அட்மிஷன் முதல் பிரதமர் பதவி வரை அனைத்தையும் அரசியலாக்கி, ஜாதி, மத பேதங்களையும், குறுகிய பிரதேசப் பித்துக்களையும் புகுத்தி குட்டிச் சுவராக்கி விட்டோம். குடியரசுத் தலைவர் பதவி மட்டுமாவது தப்பிப் பிழைக்கட்டும்.

தேரோட்டம்-24

# கமலிடம் பிடித்த விஷயம்

'இப்படிக்கூட ஒரு மனிதன் மொத்தத் திறமைகளின் முழு வடிவமாக இருக்க முடியுமா?' என்று நான் அடிக்கடி எண்ணி வியக்கிற ஒருவர் சினிமாத் துறையில் இருக்கிறார்.

சிலர் நடிப்பில் திறமைசாலியாக இருப்பார்கள். சிலர் பாட்டில். சிலர் தொழில்நுட்ப விஷயங்களில். ஆனால் ஒருத்தரே எல்லா விஷயங்களிலும் வல்லவராயிருப்பதென்பது பெரிய விஷயம்.

நாடகத் துறையிலிருந்து சினிமாவுக்கு வந்தவர்களுக்கு ஓரளவுக்குப் பல்துறை வித்தகம் சாத்தியம்தான். ஆனால் நுழைந்து - அதுவும் ஒரு நடன உதவியாளராக - கண் மூடித் திறக்கிற நேரத்தில் வானளாவிய உயரத்தில் விசுவரூபம் கொண்டு நிற்கிறவர் கமலஹாசன்.

என்னால் நிஜமாகவே நம்பக் கஷ்டமாகத்தான் இருக்கிறது. மிகப் பல வருஷங்களுக்கு முன்பு - அவர் சினிமாவுக்கு வந்த புதிதில் 'குறத்தி மகன்' என்றொரு படத்தில் அவரோடு நடித்த ஞாபகம் இருக்கிறது.

அப்போது, 'இந்தப் பையன், பின்னாளில் தேசிய அளவில் கவனிக்கப்படப் போகிற மாபெரும் நடிகனாக வருவான்' என்று யாராவது சொல்லியிருந்தால் சிரித்திருப்பேன். அந்தப் படத்தில் கமல் நடித்தார் என்று சொல்லவே முடியாது. சும்மா வந்து நின்று கொண்டிருப்பார்.

அதிகம் பேச்சு இடையாது. வீண் அரட்டை, விவாதம், அலட்டல் ஒன்றும் கிடையாது. மேலோட்டமாகப் பார்த்தால் யாரிந்தப் பையன், 'ரொம்ப அப்பாவியாகத் தேமே என்று நிற்கிறானே?' என்று கேட்கத் தோன்றும்படியான தோற்றம்.

ஆனால் அவர் அப்போதிலிருந்தே சினிமாவைக் கூர்ந்து கவனிக்கத் தொடங்கியிருக்கிறார் என்றுதான் இப்போது அதைப் புரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. அவரது கற்றுக் கொள்கிற தாகம், வேகம், மோகம் பற்றி அப்போது எனக்கு எதுவும் தெரியாது. பின்னாளில் அவருடன் எத்தனையோ படங்கள் நடித்து முடித்த பின்னும் இன்றும் கமலைக் கூர்ந்து பார்த்தால் அவர் கற்றுக் கொள்கிற விஷயத்தில் மாறவே இல்லை என்றுதான் தோன்றுகிறது! அத்தனை வெறி, வேகம்.

கூடவே இன்னொரு குணமும் அவருக்கு. இமயமலையே ஆனாலும் கொஞ்சம் தூக்கித்தான் பார்ப்போமே என்கிற முயற்சி. யாராவது புதிதாக எதையாவது செய்வதற்குள் தாம் அதைச் செய்துவிட வேண்டும்; எதிலும் முன்னோடியாக இருக்க வேண்டும் என்று நினைப்பவர்களுள் அவர் ஒரு முன்னோடி!

இந்தியன் படத்தில் அவரது கிழ வேஷத்தைப் பார்த்தபோது ஒருகணம் என் மூச்சே நின்றுவிடும் போலாகி விட்டது! நாடக காலத்திலிருந்தே கிழ வேஷம் கட்டுவதற்குப் பெயர் போனவன் என்கிற 'பெருமை' எனக்கு உண்டு.

அக்காலத்தில் டெக்னாலஜி அதிகம் வளரவில்லை. தலைமுடியை நரைக்க வைத்துக் காட்ட வேண்டுமென்றால், ஒவ்வொரு முடியாகத் தூக்கிப் பிடித்து வெள்ளைச் சாயம் போட வேண்டும். கண்ணுக்குக் கீழே கருவளையம் வர வேண்டுமென்றால், கறுப்பு பென்சிலை வைத்துக் கொண்டு எரிய எரியத் தேய்க்க வேண்டும். முகத்தை இழுத்து இழுத்து சுருக்கம் தெரிய கோடுகள் கிழிக்க வேண்டும். ஒரு கிழத் தோற்றம் கொண்டு வர குறைந்த பட்சம் ஐந்து மணி நேரமாகும். பிராணன் போய் விடும்.

வி.கே. ராமசாமி

அப்படிச் செய்தும் இது மேக்-அப்தான் என்று பார்க்கிறவர்களுக்குத் தெரியாமல் போகாது. ஆனால் இந்தியனில் கமல் கிழ வேஷம் போடவில்லை. என்னைப் பொறுத்தவரை அந்தப் படத்தில் அவர் ஒரு கிழவனாகப் 'பிறந்திருக்கிறார்' என்றுதான் சொல்லுவேன்.

அந்த மேக்-அப்புக்காக அவர் பட்ட கஷ்டங்களைப் பற்றிப் படித்தபோதும் கேள்விப்பட்டபோதும் எனக்கு எத்தனை பெருமிதமாக இருந்தது தெரியுமா? இத்தனை சின்ஸியரான ஒரு கலைஞனின் சம காலத்தில் நாமும் வாழ்ந்து, அவரைப் பாராட்ட முடிகிறதே என்கிற பெருமை!

தங்கத்திலே வைரம் - என்றொரு படம் - ரொம்ப நாள் முன்பு வந்தது. அந்தப் படத்தில் சிவகுமார் ஹீரோ. கமல் இரண்டாவது ஹீரோவாக நடித்தார் என்று ஞாபகம். படத்தில் நானும் நடித்தேன்.

பொதுவாக நான் வெளியே சாப்பிடும் வழக்கம் இல்லாதவன். உடம்புக்கு ஒத்துக் கொள்ளாது. படப்பிடிப்பின்போதும் (அது வெளியூராக இருந்தாலும் என் வீட்டு சமையல்காரரோ, என் மனைவியோ உடன் வந்துதான் சமைத்துப் போடுவார்கள்) வீட்டிலிருந்துதான் சாப்பாடு வரும்.

அந்தப் படத்தின் படப்பிடிப்பு சமயம் ஒருநாள் மதிய உணவைக் கமலுடன் சேர்ந்து சாப்பிட்டால் என்ன என்று தோன்றிற்று.

கமலைக் கூப்பிட்டேன்: "வாங்க! சேர்ந்து சாப்பிடலாம்!"



படம்: பிரவீண் குமார்

''அப்போது, 'இந்தப் பையன், பின்னாளில் தேசிய அளவில் கவனிக்கப்படப் போகிற மாபெரும் நடிகனாக வருவான்' என்று யாராவது சொல்லியிருந்தால் சிரித்திருப்பேன். அந்தப் படத்தில் கமல் நடித்தார் என்று சொல்லவே முடியாது. சும்மா வந்து நின்று கொண்டிருப்பார்.''

அப்போது அவர் கம்பெனி உணவைச் சாப்பிட உட்கார்ந்திருந்தார்.

''இல்லண்ணே நான் இங்கேயே சாப்பிட்டுக்கறேன்'' என்றார், சற்றே வெட்கப்பட்டுக் கொண்டு.

''அட வருவீங்களா... நீங்க அசைவம் சாப்பிடுவீங்க இல்லே?'' என்றேன் குறும்பாகச் சிரித்தபடி. (என் வீட்டு அசைவ உணவு எப்போதும் ஸ்பெஷல்

ரகம்!)

அவர் மிகவும் வெட்கப்பட்டவாறு ரகசிய மாக "சாப்பிடுவேன்" என்றார்.

"சரி, வாங்க சாப்பிடுவோம்" என்று வலுக் கட்டாயமாகக் கூப்பிட்டு, உட்கார வைத்து சாப்பிடச் செய்தேன்.

சாப்பிடுவதைக்கூட ஒரு கலையாக அவர் செய்வதை அன்று கண்டேன்! அத்தனை அழகாக, ரசித்துச் சாப்பிட்டார்!

சாப்பிட்டு முடித்ததும் "இந்தச் சாப்பாடு சாப்பிட்டதும் கொஞ்ச நேரம் படுத்துடணும். அப்பத்தான் சுகமா இருக்கும்?'' என்று அவரிடம் சொன்னேன்.

"படுக்கறதா? சரிதான், லஞ்ச் பிரேக் முடிஞ் சதும் முத முத என் சம்பந்தப்பட்ட சீன்தான் எடுக்கப் போறாங்கன்னு நினைக்கறேன். படுத்தா தூங்கிடுவேனே?"

"நீங்க படுங்க சொல்றேன். நான் டைரக் டர்கிட்ட சொல்றேன். கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துட்டு, அப்புறம் வேலையைத் தொடங் குங்க. பிரமாதமா வரும்!" என்றேன்.

இந்தச் சம்பவத்தை நானே அநேகமாக மறந்து விட்டேன். சத்யா படப்பிடிப் பின்போது ஒருநாள், கமல் என்னைத் தம் முடன் சாப்பிடக் கூப்பிட்டார்.

நான், கமல், அவரது மனைவி. மூவரும் அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது சட்டென்று கமல் கேட்டார். "அண்ணே ஞாபகம் இருக்கா? எத்தனையோ வருஷம் முன்னாடி இப்படி என்னை ஒருநாள் கூப்பிட்டு நீங்க சாப்பிட வெச்சி, தூங்கவும் ஏற்பாடு பண்ணீங்க... நினைவிருக்கா?'' என்று கேட்டு விட்டு, அன்று நான் அன்புடன் அவரை உபசரித்ததைத் தம் மனைவியிடம் ஆர்வமுடன் விவரிக்கத் தொடங்கிவிட்டார்.

இதை எதற்காகக் குறிப்பிடுகிறேன் என் றால் ஒரு சீரியஸான கலைஞராக, பல்துறை வித்தகராக, மக்களுக்குத் தெரிந்திருப்பவர் கமல். சினிமாவில் மட்டுமின்றி, வாழ்விலும் சீரியஸாகவும் எப்போதும் தீவிரமாக, எதை யாவது சிந்தித்தபடியும் 'ரிஸர்வ்டாக'வும்தான் இருப்பார் என்று பலர் நினைத்துக் கொண் டிருக்கக் கூடும்.

அது உண்மையல்ல! அவரைப் போல நகைச்சுவை உணர்வு கொண்ட மனிதர்களை விரல் விட்டு எண்ணி விடலாம்! செட்டில் ஒரு புள்ளிமான் போலத் துள்ளிக் குதித்தபடி அவர் அங்குமிங்கும் அலைந்து திரிந்து, ஜோக் அடித்துப் பேசிச் சிரித்து, உற்சாகமாக வேலை பார்ப்பதைக் கண்டு நானே வியந்திருக்கிறேன்.

ஒவ்வொரு படத்திலும் காட்சிகள் சரியாக அமைய வேண்டும், படம் சிறப்பாக வர வேண்டும் என்பதில் அவருக்கு இருக்கிற தீவிரம் இவ்வளவு அவ்வளவு அல்ல... நியாய மாக டென்ஷனின் மொத்த வடிவமாகத்தான் அவர் காணக் கிடைக்க வேண்டும். ஆனால் செட்டில் அவர் படபடத்து நான் பார்த்த தில்லை. அதிர்ந்து பேசவோ, கோபப்பட்டுக் கத்தவோ கண்டதில்லை. மாறாக எப்போதும் புன்னகையும் உல்லாசமுமாகத்தான் இருப்பார்.

கமலிடம் எனக்கு ரொம்பப் பிடித்த ஒரு விஷயம் நாடகக்காரர்கள் மேல் அவர் கொண் டிருக்கிற அபாரமான மரியாதை.

அவ்வை டி.கே. சண்முகம் அண்ணாச் சியை அவர் தம் ஆசானாகக் கொண்டிருப் பதை வைத்து மட்டும் இதைச் சொல்ல வில்லை. நான் உட்பட, நாடக உலகிலிருந்து சினிமாவுக்கு வந்த கலைஞர்கள் யாரா யிருந்தாலும் சரி - உடன் நடிக்கிறபோது பேசிப்பேசி நிறைய விஷயங்களைத் தெரிந்து கொள்கிற ஆர்வம் அவருக்கு இயல்பாகவே இருக்கிறது.

மகாநதி என்றொரு படத்தின் படப் பிடிப்பு நடந்து கொண்டிருந்த சமயம்.

ஷாட் இடைவேளையின்போது ஒரு பத்திரிகை நிருபர் என்னை பேட்டி காண வந்தார்.

"அன்றைய நகைச்சுவையோடு ஒப்பிட் டால் இன்று சினிமாவில் நகைச்சுவை எந்த அளவுக்கு இருக்கிறது?" என்று கேட்டார்.



''நேத்து ஒரு வீட்ல 'திருடும்போது' திடீர்னு போலீஸ்காரங்க வந்துட் டாங்க...''

''ஐய்யயோ, அப்புறம்?''

''இனிமே ஸ்பாட்டுக்கு வந்தீங்கன்னா 'மாமூலே' தரமாட்டேன்னு எச்சரிச்சு அனுப்பிட்டேன்!''

— க. பாலசுப்ரமணியன்

# உடலுறவில் அலட்சியம் காட்டாதீர்.
# உயிருக்கு ஆபத்தைத் தேடாதீர்.



**மூலை முடுக்கெல்லாம் சுற்றித்திரிகிறது ஒரு கொலைகாரத் தொற்று நோய் - எய்ட்ஸ்**

எய்ட்ஸ் நோய் பற்றி நீங்கள் ஏற்கெனவே அறிந்திருப்பீர்கள். அது உங்களுக்கு இழைக்கக் கூடிய துன்பத்தை, உங்களையும் உங்கள் குடும்பத்தையும் அழித்திடும் பரிதாபத்தையும் புரிந்து கொண்டிருப்பீர்கள். ஆனால், **எச்.ஐ.வி/எய்ட்ஸ்** நோயால் பாதிக்கப் பட்டிருக்கும் நபர்களில் 90% பேர், **ஆணுறை உபயோகிக்காமல் உடலுறவு** வைத்துக் கொண்டதன் காரணமாகவே அந்த நோய்களுக்குப் பலியாகியிருக்கிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியுமா? 10 சதவிகிதத்தினர் மட்டுமே உடலினுள் நோய்க்கிருமி ஊடுருவிய இரத்தம் செலுத்துதல், கிருமி நாசினித் தூய்மை செய்யப்படாத மருந்தூசிகள் ஆகியவை மூலம் **எச்.ஐ.வி / எய்ட்ஸ்** நோய்க்கு ஆளாகியிருக் கிறார்கள். கருவுற்ற தாய் மூலம் குழந்தைக்கு தொற்றுநோய் ஏற்படுவதும் இதிலேயே அடங்கும்.

ஆகவே, ஆணுறை அணியாமல் உடலுறவு வைத்துக் கொள்ளும் பழக்கத்தை எப்போதுமே கொள்ளாதீர். ஆணுறை உபயோகிப்பது வாழ்வுக்கும் சாவுக்கும் - ஆம், **உங்களுடைய வாழ்வுக்கும் சாவுக்கும்** - இடையில் உள்ள வேறுபாட்டை தெள்ளத் தெளிவாகப் புரிந்திடச் செய்யும்.

## எப்பொழுதும் ஆணுறை உபயோகியுங்கள்.
## உண்மையான ஆண்மகனின் உயர்ந்த பண்பாடு அதுவே.



**தமிழ்நாடு எய்ட்ஸ் கட்டுப்பாட்டு அமைப்பு,**
417, பாந்தியன் ரோடு, எழும்பூர், சென்னை - 600 008. போன் : 8255467 / 8255261 / 8254917
மேலும் எங்களை அணுக: 24 மணிநேர ஹாட்லைன் தொலைபேசி எண்: 8256882 / 8256864

TNSACS/1014/97/ELEGANT

மகா மோசம் என்று சொல்வேன் என்று நினைத்தாரோ என்னவோ!

ஆனால், என்னைப் பொறுத்தவரை நகைச்சுவை என்றில்லை... எல்லா விஷயங்களிலுமே இன்றைய சினிமா அபார வளர்ச்சி கண்டிருக்கிறது. புதிய புதிய விஷயங்கள் மனதில் பனிச்சென்று பதியும் விதமாக, ஒருவித நவீனத்துடன் சொல்லப்படுகிறது.

"நீங்கள் குறிப்பாக நகைச்சுவை பற்றிக் கேட்டதால் வெளிப்படையாகச் சொல்கிறேன். இன்று கவுண்டமணியும் செந்திலும் என்னை விஞ்சி விட்டார்கள். ஒரே வார்த்தைகளைத் திரும்பத் திரும்ப வேறு வேறு விதமாகக் கூறி வயிறு வெடிக்கச் சிரிக்க வைத்த அவர்களது வாழைப்பழக் காமெடியில் நான் அசந்தே போனேன்!'' என்று அந்த நிருபரிடம் சொன்னேன்.

தற்செயலாக அந்தப் பக்கம் வந்த கமல் இதைக் கேட்டுவிட்டு -

"ரொம்ப சந்தோஷமா இருக்கண்ணே! எப்படி மனதை விட்டுப் பாராட்டறீங்க! ஒரு கலைஞன் இன்னொரு கலைஞனைப் பாராட்டறதுதான் அவனுக்குக் கிடைக்கிற மிகப் பெரிய பரிசு!'' என்று சொல்லிவிட்டுப் போனார்.

முன்பெல்லாம், நாடகத் துறையிலிருந்து வந்தவர்களிடமிருந்துதான் தேர்ந்த, திறமை வாய்ந்த நடிப்பைப் பெற முடியும் என்றொரு அபிப்பிராயம் எனக்கு இருந்தது.

கால மாற்றத்தில் இன்று திறமையின் விதைகள் எல்லாச் செடிகளிலிருந்தும் கிடைக்கின்றன. நாடகம் பின்னணி இல்லாவிட்டால் என்ன? இன்றைய கலைஞர்களுக்கு நிறையப் படிக்கிற வாய்ப்பும் வசதியும் கிடைத்திருக்கிறது. விஞ்ஞான முன்னேற்றம், அவர்களுக்கும் பரந்த உலகை வீட்டின் அறைக்குள் கொண்டுவந்து கடை விரித்துக் காட்டுகிறது.

எத்தனை உலகப் படங்கள் பார்க்க முடிகிறது! அவ்வப்போதைய வளர்ச்சியைக் கவனிக்க முடிகிறது! நல்ல விஷயங்களை ரசிக்க முடிகிறது!

அந்நாளில் எங்களுக்கெல்லாம் தமிழ் நாடகம் - சினிமா தவிர வேறு மொழிப் படங்கள் பற்றிய பிரக்ஞையே கிடையாது! பள்ளிப் படிப்பு கிடையாது; நாடகக்காரர்களுக்கு சுத்தமாக இங்கிலீஷே தெரியாது!

இன்று, கமல் மாதிரி நன்கு படித்தவர்களின் 'ஆட்சி'யில், நமது சினிமா ஒரு புதுப் பரிமாணம் பெற்றிருப்பதில் எனக்குப் பிரத்தியேகமாக ஒரு சந்தோஷம் உண்டு.

(தொடரும்)

# கல்கி

**6.7.97**

இதழில்....

வையவன்

கன்னியராகி
நிலவினில் ஆடி...

புரட்சித் தொடர்
ஆரம்பம்!

மேலும் பல புதிய அம்சங்கள்
உங்களை அசரவைக்கப் போகின்றன!



# கொடி இடை வேணுமா? கொடுங்கள் ஐயாயிரம்!

"இன்னும் எக்ஸ்-ரே கருவியும், ஈ.ஸி.ஜி. கருவியும்தான் அழகு நிலையங்களில் அறிமுகப்படுத்தப்பட வில்லை'' என்ற கமெண்ட்டை விரைவில் கேட்கலாம். அந்த அளவுக்கு, புற அழகோடு ஆரோக்கியத்துக்கும் முக்கியத்துவம் கொடுப்பதாக விளம்பரம் செய்து கொள்கின்றன அழகு நிலையங்கள். அவ்வப்போது புதுப் புதுக் கருவிகளை நிறுவுகின்றன.

இந்த வரிசையில் லேட்டஸ்டாக வந்திருக்கிறது 'ஸ்லிம்டோன்'. ஐந்து வருடங்களாக ஆஸ்திரேலியாவில் பெரும்புகழ் பெற்றுள்ள இக் கருவி சமீபத்தில் இந்தியா உட்பட வேறு சில நாடுகளிலும் அறிமுகமாகியிருக்கிறது.

இந்த நிறுவனத்தின் தொழில் நுட்ப இயக்குனர் ஹெலன் க்ரீன்பெர்க் சமீபத்தில் சென்னை வந்திருந்தார்.

"இருபத்தெட்டு வருடங்களுக்கு முன் லூஜி போரி என்ற எலும்பு சிகிச்சை நிபுணர் உருவாக்கியது இந்தக் கருவி. இதன் கமர்ஷியல் மதிப்பைப் புரிந்துகொண்டு நாங்கள் இதை அழகு நிலையங்களிலும் அறிமுகப்படுத்தினோம்.

"நம் உடலிலுள்ள தசைக்கூட்டங்களில் இரண்டு வகைகள் உண்டு என்கிறார்கள் மருத்துவர்கள். சிவப்புத்தசை நார்கள் நிதானமாகச் செயல்படும் என்றாலும் இவற்றில் ரத்தம் அதிகமாகப் பாய்வதால் நீண்ட நேரத்திற்குச் செயல்படுகின்றன. வெள்ளைத் தசை நார்கள் குறைந்த நேரத்திற்கு வெகு வேகமாக இயங்கி விட்டுப் பிறகு களைப்படைந்து விடும்.

"இந்த இரண்டு வித தசைகளுக்கும் புத்துணர்வு ஊட்ட வேண்டுமென்றால் வெப்பம், மின்னதிர்வு ஆகிய இரண்டும் கலந்த செயல்முறையைப் பயன்படுத்த வேண்டும். அதற்கு ஸ்லிம்டோன் உதவுகிறது. தசைகளைச் சுருக்கும்; அதேசமயம் இயற்கையான உடல் இயக்கங்களையும் இது எளிதாக்குகிறது'' என்றவரிடம் சில சந்தேகங்களைக் கேட்டோம்.

'ஜிம்'மில் வழக்கமாக (தொப்பையைக் குறைக்க) ஒரு கருவி உண்டு. பெல்ட் போல ஒன்றை மாட்டிக் கொண்டால், அது அதிர்வுகளை உண்டாக்கும். இதற்கும் ஸ்லிம்டோனுக்கும் என்ன வித்தியாசம்?

"அந்த பெல்ட் அதிர்வுகளை உண்டாக்கும். இது தசைகளைச் சுருக்கும். 'லைபோசக்ஷன்' அறுவைச் சிகிச்சையில் அதிகப்படி கொழுப்பை நீக்குவதுண்டு. ஆனால் அதில் தழும்புகள் உண்டாகும். 'டயட்'டில் இருந்தால் தசைகள் தொங்கும். தவிர உடலின் எரிப்பு சக்தி (metabolic rate) குறையும். ஸ்லிம்டோனைப் பொறுத்தவரை இதனால் எரிப்பு சக்தி அதிகமாகிறது; எனவே எடை இதனாலும் குறைய வாய்ப்பு உண்டு.''

படுக்க வைத்து, தசைகள் குறைய வேண்டிய பகுதியில் மின் முனைகளைப் பொறுத்தி 24 வோல்ட் மின்சாரத்தைப் பாய விடுகிறார்கள். கம்ப்யூட்டரின் உதவியால் தசைகள் சுருங்கும் திசையும், வேகமும் ஒவ்வொரு நிமிடமும் தானாக மாறுகின்றன. சுமார் பதினைந்து நிமிடங்கள் இப்படி. முகத்திற்கும் இதுபோன்ற சிகிச்சை இருக்கிறது!

அழகு நிலையங்களில் அறிமுகமானாலும் அடிப்படையில் இது ஒரு மருத்துவக் கருவி என்பதால் பக்க விளைவுகள் ஏதும் நிச்சயம் இருக்காது என்கிறார்கள்.

சென்னையில் இந்தக் கருவியை அறிமுகப்படுத்தியுள்ள லலிதாராயிடம், 'இந்தக் கருவி மூலம் பயனடைய எவ்வளவு கட்டணம் செலுத்த வேண்டும்?' என்றோம்.

"குறைந்தது பத்து சிட்டிங்குகள். மொத்தம் ஐயாயிரம் ரூபாய்'' என்று சற்றே தயக்கத்துடன் பதில் வந்தது.

— குல்லூ

**மூலம் : டேனியல் ஸ்டீல்**

டாக்டர் என்ன பதில் சொல்லப் போகிறாரோ என்று நடுங்கிக் கொண்டு காத்திருந்தாள் பேஜ்.

"உங்கள் பெண் உயிருடன் இருக்கிறாள், மிஸஸ் பிராட்," என்றார் தலைமை சர்ஜன். "நல்ல திடகாத்திரமான பெண். ரொம்பப் பலமான அடி. ரொம்பப் பயங்கரமான காயம். இத்தனைக்கும் பின் அனேகமாக யாரும் உயிர் பிழைத்தே இருக்க மாட்டார்கள். இவள் பிழைத்திருக்கிறாள். அதுவே ஒரு நல்ல அறிகுறி. ஆனாலும் கூட அவள் குணமாவதற்கு வெகு தூரம் இருக்கிறது."

அவர் கடகடவென்று சொல்லச் சொல்ல, பேஜ் மூச்சைப் பிடித்தபடி கேட்டுக் கொண்டிருந்தாள்.

தலைமை சர்ஜன் தொடர்ந்தார். "அவளுடைய காயத்தை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். இரண்டுமே மிகவும் சிக்கலானவை. முதல் காயம், கார் மோதிய அந்தக் கணத்திலேயே ஏற்பட்டிருக்கிறது. மண்டையோட்டுடன் மூளைப் பகுதி இடித்து, சுழன்று போயிருக்கிறது. அதனால் நரம்பு திசுக்கள் நீண்டு இழுத்துக் கொண்டு போயிருக்கக்கூடும். ரத்த நாளங்கள் கிழிந்து போயிருக்கலாம். இது கடுமையான சேதம்."



தாரென்ஸனும் பேஜும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

தலைமை சர்ஜன் கூறினார் : "முதல் காயத்தைக் காட்டிலும் இரண்டாவது காயம்தான் ரொம்பப் பயங்கரமானது என்று தோன்றுகிறது. மண்டையோடு வெட்டப்பட்டு, எலும்பு உடைந்து, திறந்த காயமாகவே இருக்கிறது. மூளைப் பகுதி வெளியே தெரியும்படி திறந்து கிடக்கிறது. கார் மோதிய போது ஏதோ கூர்மையான தகடு அங்கே இடித்திருக்க வேண்டும்."

பேஜினால் தாங்க முடியவில்லை. வாய் விட்டு 'ஐயோ' என்று கூவிவிட்டாள். தன்னையும் அறியாமல் தாரென்ஸனின் கையை இறுக்கிப் பிடித்துக் கொண்டாள். தலைமை சர்ஜன் சொல்வதைக் கேட்கும்போது அவளுக்குத் தலைசுற்றியது. எனினும் மயக்கம் போட்டு விழுந்து விடக்கூடாது என்று உறுதி பூண்டாள்; என்ன ஆனாலும் சரி, மனம் தளர்வதில்லை என்று தீர்மானம் செய்து கொண்டாள். டாக்டர்கள் சொல்வதைத் தெளிவாக மனசில் வாங்கிக் கொள்ள வேண்டும் என்று எண்ணியவளாக மௌனமாய்க் கேட்டவாறு நின்றிருந்தாள்.

"ஒரு விஷயம் உங்கள் இருவருக்கும் சொல்ல வேண்டும்," என்று தொடர்ந்தார் தலைமை சர்ஜன். பேஜும் தாரென்ஸனும் கணவன், மனைவி என்று அவர் நினைத்திருப்பது தெரிந்தது.

"திறந்திருக்கும் காயத்துக்குப் பக்கத்தில் உள்ள மற்றப் பகுதி சேதமடையாமல் இருக்கிறது. ஆனால் இதுபோன்ற திறந்த தலைக்

**தமிழில் : ரா.கி. ரங்கராஜன்**



# 11

உணர்ச்சியும் வெளிக்காட்டாமல் அமைதியாக அவர் கேட்ட விதமே இன்னும் பயப்படுத்துவதாக இருந்தது.

''நான் மிஸ்டர் பிராட் அல்ல,'' என்றான் தாரென்ஸன். சர்ஜன் கூறிய விவரங்களைக் கேட்டு அவன் குரலும் கம்மிப் போயிருந்தது. ''நான் இவர்களுடைய குடும்ப சினேகிதன். அவ்வளவுதான்!'' என்றான்.

தலைமை சர்ஜன் சற்று ஏமாற்றத்துடன், ''ஓ, அப்படியா?'' என்று சொல்லிவிட்டு பேஜிடம், நான் சொன்னது உங்களுக்குப் புரிந்திருக்கும். இல்லையா மிஸஸ் பிராட்?'' என்றார்.

''ஏதோ கொஞ்சம்

# 11:29

காயங்களால் சிறு சிறு கோளாறுகள் நீண்ட நாளைக்கு இருக்கும். எங்கள் கவலை முதல் காயத்தைப் பற்றியதுதான். நிறைய ரத்தம் கொட்டி விட்டதால் மிகவும் பலவீனமாக இருக்கிறாள். மூளைக்குப் போக வேண்டிய பிராணவாயுவும் குறைந்திருக்கிறது. எலும்பைச் சரிப்படுத்தி, காயத்துக்குக் கட்டுப் போட வேண்டும். கண்களை கவனிக்க வேண்டும். பலமான மோதலினால், குருடாகக்கூடிய வாய்ப்பு இருக்கிறது. மூச்சு விடுவதற்குச் சிரமப்படுகிறாள். குழாய் வழியே பிராண வாயு செலுத்திக் கொண்டிருக்கிறோம். ஸிடி ஸ்கேன் எடுத்ததில் சில முக்கியமான தகவல்கள் கிடைத்திருக்கின்றன.''

எதிரில் கற்சிலை போல் உட்கார்ந்திருக்கும் பேஜைப் பார்த்தார் தலைமை சர்ஜன். தான் சொன்னதெல்லாம் அவளுக்குப் புரிந்திருக்கிறதோ இல்லையோ என்று சந்தேகமாக இருந்தது.

''நான் சொன்னது புரிந்ததா, மிஸ்டர் பிராட்?'' என்றார் தாரென்ஸனை நோக்கி. எந்த

புரிந்த மாதிரி இருக்கிறது. என் பெண்ணுக்கு இரண்டு பெரிய காயம் ஏற்பட்டிருப்பதாகச் சொல்கிறீர்கள். மண்டையோடு உடைந்து காயம் வெளியே தெரிகிறது என்கிறீர்கள். மூளை சுழன்று விட்டது என்கிறீர்கள். இந்தக் காயங்களின் விளைவாக அவள்... அவள்.. இறந்து போகக்கூடும் அல்லது நிரந்தரமாக மூளையில் கோளாறு ஏற்படும் என்கிறீர்கள். அத்துடன் கண்... கண்ணும் போய் விடலாம்

'Accident' என்ற ஆங்கில நாவலின் தமிழ் வடிவம். © டேனியல் ஸ்டீல்

என்கிறீர்கள். இல்லையா?" என்று பேசப் பேச அவள் கண்ணில் கண்ணீர் தளும்பிக் கொண்டிருந்தது.

"இவைகளைத் தவிர, இனிமேல் ஏற்படக்கூடிய கோளாறுகளும் சில இருக்கக் கூடும்," என்றார் தலைமை சர்ஜன். "மூளையில் வீக்கம், ரத்தம் கட்டிக் கொள்வது, முதலியன இருக்கலாம். அதை இப்போது சொல்ல முடியாது. இருபத்து நாலு மணி நேரத்துக்குப் பிறகுதான் அந்தக் கோளாறுகள் தெரியும்."

பேஜ் வெகு நேரமாக ஒரு கேள்வியைக் கேட்க நினைத்து, ஆனால் கேட்டால் என்ன பதில் வருமோ என்று பயந்து கேட்காமல் இருந்தாள். அதை இப்போது கேட்டாள். "டாக்டர்... அவள் நார்மலாக ஆவதற்குச் சான்ஸ் இருக்கிறதா? என்றைக்காவது ஒருநாள் அவள் நார்மலாக ஆவாளா?"

"நார்மல் என்பது பல நிலைமைகளைப் பொறுத்திருக்கிறது, மிஸஸ் பிராட். அவள் மூளைக் காயம் தாற்காலிகமானதாகவும் இருக்கலாம். நிரந்தரமானதாகவும் இருக்கலாம். பகுத்தறியும் சக்தி குறைந்து, அவள் குணமே மாறலாம். எல்லாம் நல்லபடி நடந்து, நமக்கு அதிர்ஷ்டம் இருந்தால் சரியாகும். இல்லாவிட்டால்..."

"இல்லாவிட்டால்?"

"நினைவில்லாமல் கோமாவிலேயே நிரந்தரமாகக் கிடப்பாள். மூளையில் வீக்கம் எந்த அளவுக்கு ஏற்படும் என்பதைப் பொறுத்தது அது. அதனால் உடனேயே ஆபரேஷன் செய்ய நினைத்திருக்கிறோம். அதற்கான பேப்பர்களில் கையெழுத்திட்டுக் கொடுங்கள்."

ஒரு பந்தை விழுங்கினாற்போல அவள் நெஞ்சு அடைத்துக் கொண்டது." என் கணவர் எங்கே இருக்கிறார் என்று தெரியவில்லை. நாளைக்குத்தான் தெரியும்," என்றவள்



"உங்க ஆபீசில் மொத்தம் எத்தனை பேர் வேலை செய்யறீங்க?"

"கால்வாசிப் பேர்தான்!"

— எஸ். பொன்னுசாமி

பொழுது விடிந்து கொண்டிருப்பதை உணர்ந்து, "அதாவது இன்றைக்குத் தெரியும்," என்றாள்.

அவள் குரலில் தென்பட்ட வேதனை தாரென்ஸனுக்குப் புரிந்தது. எப்படிப்பட்ட போராட்டம் அவளுக்குள்ளே நடந்து கொண்டிருக்கிறது என்பதை அவன் உணர்ந்தான். ஆயினும் அவளுக்கு என்ன உதவி செய்ய முடியும் என்றும் தெரியவில்லை.

"அவர் இல்லாவிட்டால் என்ன? உங்கள் பெண்ணை இதற்கு மேலும் காக்க வைக்கக் கூடாது, மிஸஸ் பிராட். ஸ்கேன் எடுத்தாயிற்று. எக்ஸ்ரே எடுத்தாயிற்று. இனி அடுத்த நடவடிக்கையில் இறங்கியாக வேண்டும். நாம் இங்கே பேசிக் கொண்டிருக்கும் ஒவ்வொரு நிமிடமும் அவள் உயிருக்கு அபாயம். பேப்பர்களில் நீங்கள் கையெழுத்துப் போடலாமே?"

"கொஞ்சம் காத்திருக்க முடியாதா, டாக்டர்?" என்று பேஜ் பரிதாபமாகக் கேட்டாள். ஆலிஸன் இவள் குழந்தை மட்டுமல்ல. பிராடின் குழந்தையும்தான். பிராட் இல்லாத போது இவ்வளவு பெரிய சிகிச்சைக்குச் சம்மதிப்பது சரிதானா? அவள் குழம்பினாள்.

ஒளிவுமறைவு இல்லாமல் நேர்மையுடன் பேசினார் தலைமை சர்ஜன். " ஆபரேஷன் செய்யாவிட்டால் இன்னும் இரண்டு மணி நேரத்துக்கு மேல் உங்கள் பெண் உயிரோடு இருக்க மாட்டாள். அப்படியே இருந்தாலும் அவள் மூளை இயங்குவது சந்தேகம். கண் பார்வையும் போய்விடும்."

"என்ன செய்வதென்று எனக்குத் தெரியவில்லை..." என்றபடி தாரென்ஸனின் கையை அழுந்தப் பற்றிக் கொண்டாள் அவள்.

"உங்கள் கணவர் ஒன்றும் சொல்ல மாட்டார், மிஸஸ் பிராட். நாங்கள் எங்களால் முடிந்ததைச் செய்யலாமென்று பார்க்கிறோம்."

இவர்களை நம்பித்தான் ஆக வேண்டும்... வேறுவழியில்லை... ஆனால், பிழைத்தபின்னும் ஆலிஸன் இவர்கள் சொல்வது போலக் கோமாவிலேயே கிடந்தால்? ஆயுள் பூராவுக்கும் மூளைக் கோளாறுடனேயே இருக்க நேரிட்டால்? உயிர் பிழைத்ததற்கு என்ன அர்த்தம்? எந்த வெற்றியிலே இது சேர்த்தி...?

"ஆபரேஷனுக்குச் சம்மதம் என்று பாரத்தில் கையெழுத்திடுங்கள், மிஸஸ் பிராட். என்ன சொல்கிறீர்கள்?"

ஒரு நீண்ட நிமிடம் மௌனமாக இருந்த பின் சம்மதமென்று தலையை அசைத்தாள் பேஜ். "எப்போது ஆபரேஷன் ஆரம்பிக்கப் போகிறீர்கள், டாக்டர்?"

"இன்னும் அரை மணி நேரத்தில்."

"அதுவரையில் என் பெண்ணின் பக்கத்தில் நான் இருக்கலாமா?" என்றபோது அவள் கண்களில் கண்ணீர் வழிந்தது. என் கண்மணி

யைப் பார்ப்பது இதுவே கடைசித் தடவையாக இருக்குமோ? கடவுளே, வீட்டில் அவன் இருந்தபோது அவளுடன் இன்னும் கொஞ்ச நேரம் பேசாமலே போய் விட்டேனே? நான் சொல்ல நினைப்பதையெல்லாம் சொல்ல முடியாமல் அற்பாயுசிலேயே என் குழந்தை போய் விடுவாளோ?

"சரி, வாருங்கள்" என்று கூறி முன்வே நடந்தார் தலைமை சர்ஜன். எதுவும் பேசாமல் இருந்த மற்ற இரண்டு சர்ஜன்களும் கூடவே வந்தார்கள்.

"ஆனால் ஒன்று, மிஸஸ் பிராட்," என்றார் தலைமை சர்ஜன். "ஏகப்பட்ட காயங்களுடன் ஆலிஸன் ஆழ்ந்த மயக்கத்தில் படுத்திருக்கிறாள். உங்கள் கண்ணுக்குத் தெரியும். வெளிக் காயங்கள் அனேகமாக ஆறிவிடும். மூளையைப் பற்றித்தான் எதுவும் சொல்வதற்கில்லை" என்று பேஜை எச்சரித்தபடி அழைத்துச் சென்றார் அவர்.

அவ்வளவு எச்சரிக்கை செய்திருந்த போதிலும், அப்படியொரு காட்சியைப் பேஜ் எதிர்பார்க்கவில்லை.

கட்டிலில் ஆலிஸன் கிடந்தாள். அருகில் ஒரு டாக்டரும் இரண்டு நர்ஸ்களும் நின்றிருந்தார்கள். தொண்டையில் ஒரு ட்யூப். மூக்கில் ஒரு ட்யூப். கையில் ரத்தம் செலுத்தப்படும் குழாய். காலிலே ஒரு ட்யூப். அறையெங்கும் ஏராளமான கருவிகள், ஏராளமான மெஷின்கள், ஏராளமான மானிட்டர்கள்...

இவ்வளவுக்கும் நடுவே, அழகிய ஆலிஸன் முகமெல்லாம் சிதைந்தவளாகக் கிடந்தாள். அடையாளம் தெரியாத அளவுக்குக் கோரம். ஒரு வெள்ளைத் துணி அவள் கருங் முடியை மூடியிருந்தது. அடுத்த சில நிமிடங்களில் அந்த முடியை நீக்கி மொட்டை அடித்து விடுவார்கள்...

ஆலிஸனை அடையாளம் தெரிந்து கொள்வது மற்றவர்களுக்கு வேண்டுமானால் கஷ்டமாக இருக்கலாம். ஆனால் பெற்ற தாயாருக்குத் தன் குழந்தையைத் தெரியாமலா போகும்? அவள் கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் அவள் இதயத்துக்குத் தெரியும்.

மெதுவே நடந்து மகளின் அருகே சென்றாள். மௌனமாக நின்றாள்.

ஆலிஸனின் காதுக்குப் பக்கமாகக் குனிந்து, "கண்ணம்மா..." என்று மென்மையாக அழைத்தாள், தான் கூப்பிடுவது, மகளின் உடம்புக்குள் தொலையாத தூரத்தில் எங்கோ இருக்கும் ஏதோ ஓர் உறுப்புக்குக் கேட்கும், கேட்க வேண்டும் என்று அவள் உள்ளம் பிரார்த்தனை செய்தது. "பேபி, ஐ லவ் யூ. என் கண்ணே, எல்லாம் நல்லபடியாகும்டி, கண்ணம்மா. ஆலி, ஐ லவ் யூ. நான் மட்டுமில்லை. நாங்கள் எல்லாருமே



"கட்சிக்காரங்களை 'கண்ட்ரோல்' பண்றதுக்கு புது திட்டம் வச்சிருக்கீங்களா, என்ன அது?"

"அவதூறு பரப்புச் செயலாளர்னு ஒரு புதுப் பதவியை உருவாக்கப் போறேன். அவனவன் ஆடிப் போக மாட்டானா?"

— வடவள்ளி ராமசுப்ரமணியன்

உன் மீது உயிரை வைத்திருக்கிறோம் அம்மா."

இந்த ஒரே வார்த்தைகளைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டு, அழுதவாறே மகளின் கையையும், தோளையும், காயம் படாமலிருந்த ஒரே ஒரு கன்னத்தையும் வருடினாள்.

எத்தனை வெளுத்துப் போயிருக்கிறாள் குழந்தை! எவ்வளவு சிதைந்து போயிருக்கிறாள்! இதயம் துடிப்பது மானிட்டரில் தெரியா விட்டால் அவள் இறந்து விட்டாள் என்றே பேஜ் நினைத்திருப்பாள். நடந்ததையெல்லாம் இப்போது கூட அவளால் நம்ப முடியவில்லை. ஆலிஸனைப் பார்க்கப் பார்க்க இதயத்தில் வலி எடுத்தது.

"பேபி, நாங்கள் எல்லாரும் உன்னை நேசிக்கிறோம். நீ நல்லபடி குணமடைவாய். குணமடைய வேண்டும். எனக்காக... அப்பாவுக்காக... உன் தம்பி ஆண்டிக்காக..."

மகளின் அருகில் வெகு நேரம் நின்றிருந்தாள். நேரமாகிறது என்று சர்ஜன்கள் ஞாபகப் படுத்தினார்கள். ஆபரேஷனின் போது தானும் கூட இருக்கலாமா என்று பேஜ் கேட்டாள். ஆலிஸனுக்கு என்னென்ன செய்கிறார்கள் என்பதை அருகிலிருந்து பார்க்க அவள் தவித்தாள். ஆனால் முடியாது என்று சொல்லி விட்டார்கள்.

ஆலிஸனின் தலையை மழிப்பது உள்படப் பல வேலைகள் இருக்கின்றன என்றும் அதையெல்லாம் பார்க்க அவளுக்குக் கஷ்டமாக இருக்கும் என்றும் சொன்னார்கள்.

"நான்... நான்... எனக்கு..." அவளால் சொல்ல முடியவில்லை. திணறினாள். இறுதியில் நர்ஸிடம் கேட்டாள் : "... வந்து... என் பெண்ணின் தலையை மழித்ததும் கொஞ்சம் முடியை எடுத்து வைத்திருந்து எனக்குத் தர முடியுமா?"

(தொடரும்)

# இரண்டும் இரண்டும்

சுபா

திருவள்ளுவர் பேருந்து நிலையத்தில் இறங்கியதுமே சந்தானம் ரிக்ஷா பிடிக்க முடிவு செய்தான். அவனிடமிருந்து பெட்டியை வாங்கிக் கொண்டேன். எங்களை சில ரிக்ஷாக்காரர்கள் சூழ்ந்தனர்.

"எங்க சார் போகணும்?" என்று பெட்டியைப் பறிக்க முயன்றான், தாடிக்காரன். "நான்தான்டா மொதல்ல கேட்டேன்" என்று அவனைத் தோளால் தள்ளினான் பரட்டைத் தலையன்.

பாரதி தெரு என்று சொல்ல வாயெடுத்த போது, சந்தானம் என்னை 'பேசாமல் இரு' என்று கண்களாலேயே அதட்டினான்.

திடீரென்ற கவனத்துடன், "அந்த புக்கு எங்கேடா?" என்றான்.

" 'அது'வா? வீட்ல பெரியவங்கள்லாம் இருப்பாங்க... எதுக்கு வம்புனு பஸ்லயே விட்டுட்டேன்" என்றேன்.

"அடப்பாவி... ஏழு ரூபாடா..." சந்தானம் தன் பெட்டியையும் என் கையில் திணித்து விட்டு, நாங்கள் இறங்கிய பஸ்ஸைத் தேடி ஓடினான்.

அவன் இல்லாத தைரியத்தில் ரிக்ஷாக் காரர்கள் என்னிடம் தகவல் வாங்க முயன்றார்கள். பஸ் நிலையத்தின் வெளியே இருக்கும் ரிக்ஷா ஸ்டாண்டைச் சேர்ந்தவர்கள் அதிகம் கேட்பார்கள் என்றும், ஜங்ஷன் வரை நடந்து போனால், காலியாக வரும் ரிக்ஷா, கொடுத்த காசிற்கு வருவான் என்றும் சந்தானம் எச்சரித்திருந்தான். இந்த ஒரு ரூபாய், இரண்டு ரூபாயைப் பார்க்காதேடா என்று சொல்ல நா துடித்தாலும், அவனை கருமி என்று சுட்டிக் காட்டுவதாக அவன் தப்பர்த்தம் பண்ணிக் கொள்வானோ என்ற கவலையிலேயே மௌனமாயிருந்து விட்டேன்.

சந்தானம் அந்த ஒல்லியான புத்தகத்துடன் திரும்பி வந்தான். திண்டிவனத்தில் வாங்கியது. பழுப்புத் தாளில் அச்சாகியிருந்த புகைப்படங்களில் பெரும்பாலும் கறுப்புத் தட்டியிருந்தாலும், சந்தானத்திற்கு என்னவோ அந்தப் பெண்களையே புரட்டிப் பார்க்கும் சந்தோஷம். முற்றும் துறந்த அல்லது பெரும்பாலும் துறந்த அந்த வெளிநாட்டுப் படங்களுக்கு சற்றும் பொருந்தாமல் காமேஸ்வரி, பாலரம்பா, மின்னல் கொடி என்றெல்லாம் போட்டிருந்த பெயர்களை சந்தானம் நம்பத் தயாராய் இருந்தான். புத்தகத்தை என் பெட்டிக்குப் போட்டிருந்த துணி உறைக்குள் ரகசியப் படுத்தினான். ஏழு ரூபாய்க்கு ஏழு இரவுகளாவது அந்தப் பெண்களை தலையணைக்கடியில் வைத்திருந்தால் தான் அவனுக்குக் கட்டுப்படியாகும்.

எங்களைத் தொடர்ந்த ரிக்ஷாக்காரர்களை கவனிக்காமல் அவன் வானம் பார்த்து அலட்சியமாய் நடக்க, அவர்கள் வெறுத்து ஒதுங்கினார்கள்.

ஜங்ஷனில் ரிக்ஷாவோடு வந்த கிழவன் வண்டியை ஓரம் கட்டினான். சந்தானம் வியாபாரம் பேசினான்.

"பாரதி தெரு... எவ்வளவு கேக்கறே?"

"உனக்குத் தெரியாதா? ஏறு சார்."

"அதெல்லாம் வேண்டாம். ஒழுங்காக்

கூலியைச் சொல்லு.

"ஆறு ரூபா கொடு சார்..."

"எவ்வளவு? எவ்வளவு? ஆறு ரூபாயா? பகல் கொள்ளையா இருக்கே?"

"ரெண்டு பேர் இருக்கீங்க.. ஆறு ரூபா கொடுக்கலாம் சார்."

"சரி நீ போ... வேற ரிக்ஷா பாததுக்க றேன்..."

"ஏழைக்குக் கொடுத்தா என்னா சார்? சரி, அஞ்சு ரூபா கொடு.."

"நாலு ரூபாய்க்கு ஒரு தம்பிடி மேல தரமாட்டேன்.."

"என்னா சார்?, ராஜா டாக்கீஸ் போற துக்கே அஞ்சு ரூபா வாங்குவேன் சார்."

"சரி உனக்கும் வேணாம்... எனக்கும் வேணாம்.. ராஜா டாக்கீஸில் விட்டுரு.. நாலு ரூபா வாங்கிக்க.." என்றவன் என் பக்கம் திரும்பி, "அங்கேர்ந்து பக்கம்தான். ரெண்டு தெரு நடந்தா நம்ம வீடு" என்றான்.

ரிக்ஷாக் கிழவன் முனகிவிட்டு, "சரி ஏறு..." என்றான்.

எழுந்து எழுந்து அவன் மிதித்த ஒவ்வொரு மிதிக்கும் கால் நரம்புகள் வெளியே தெறித் தன. ரிக்ஷா லொடக் லொடக் என்று கதறுக்கு விட்டது.

ரிக்ஷாவில் பெட்டியை மடிமீது வைத் தான். பாக்கெட்டிலிருந்து அந்த சிறு அட் டையை எடுத்தான், சந்தானம்.

"பஸ்ல ஏறினதுலேர்ந்து என்னென்ன செலவு பண்ணோம் சொல்லு" என்று பெட்டி யின் மீது வைத்து எழுதத் துவங்கினான்.

"மாமண்டூர்ல ரெண்டு டீ நாலு ரூபா. அப்புறம் ஒரு ரூபாய்க்கு நீ பாக்கு வாங்கினே இல்ல? பிச்சைக்காரனுக்கு எவ்வளவு போட்டே, இருபது பைசாவா, அம்பது பைசாவா?"

"அதெல்லாம் எதுக்கு சந்தானம்?"

"புண்ணியம் எனக்கும் வரட்டுமே... கணக்குனா கணக்குதான்... உன் காசு எனக்கு எதுக்கு? என் காசு உனக்கு எதுக்கு? அப்புறம் அந்த சொத்தை வேர்க்கடலைக்கு ஒரு ரூபா தண்டம்... அடுத்த செலவு திண்டிவனம் தான் இல்ல... புஸ்தகம் ஏழு ரூபா.. மவுண்ட்ரோடு பிளாட்பாரத்துல, போன மாச புஸ்தகம் மூனு ரூபாய்க்கே கிடைக்கும். என்னவோ சூடா பாத்துரலாமேன்னு ஒரு ஆசை. இப்ப இந்த



ரிக்ஷா நாலு ரூபா.'

கணக்கு எழுதி அட்டையை பாக்கெட்டில் செருகிக் கொண்டான்.

"அந்தப் பழ வண்டிகிட்ட நிறுத்துங்க..." என்று ரிக்ஷாவை நிறுத்தி, ஆப்பிள்கள் வாங்கினேன்.

"எதுக்குடா ஆறு? வீட்ல எங்கம்மாவும், அப்பாவும் மட்டும்தான்... ரெண்டு போறும்..."

"பேசாம இரு" என்று அதட்டினேன்.

ராஜா டாக்கீஸிலிருந்து லொங்கு லொங்கு என்று பாரதி தெருவிற்கு நடந்தோம்.

தெரு விளக்குகள் பளீரென்று இருந்தன. கடைத்தெரு ஜனம் கலகலவென்று நகர்ந்தது. கார்கள், ஆட்டோக்கள், சைக்கிள்கள் பறந்தன. ஐஸ் க்ரீம் பார்லர்களில் அரை டிராயர் யுவதிகள் நுனி நாக்கால் சுவைத்தார்கள்.

ஒயின் ஷாப்பிற்கு பக்கத்தில், இருப்பதே தெரியாமல் இருந்தன மாடிப் படிகள்.

"முதல் மாடி நம்ம வீடு" என்றான்.

கடைக்காரன் சந்தானத்தைப் பார்த்து வணக்கம் சொன்னான்.

"உனக்குத் தெரியுமா? இந்த ஊர்ல பீர் மலிவு" என்று படிகளில் ஏறினான். படிகளின் முதல் திருப்பத்தில் அந்தக் குரல் மேலிருந்து தாக்கியது. முதலில் வார்த்தைகள் புரியவில்லை. அப்புறம் ஒருவாறு கோக்க முடிந்தது.

"வாயேன்... என்னை அழைச்சிட்டுப் போயேன்.. கதவைத் தெற... வா... நான் வெளிய போகணும், வா..."

"எங்கப்பா" என்றான், சந்தானம். என்னைப் பிடித்து நிறுத்திவிட்டு அவன் முன்னால் போனான்.

இரும்பு கிரில் கதவு தெரிந்தது. அதன் சதுரங்களுக்கு வெளியே கைகளை மட்டும் நீட்டி, வாவா என்று சைகை செய்த கிழவரின் வயதை என்னால் யூகிக்க முடியவில்லை. சந்தானம் போய் நின்றதும், "யாரு நீ? வீட்ல யாரும் இல்ல... நாளைக்கு வா..." என்றார்.

சந்தானம் அவர் கைகளைப் பிடித்து உள்ளே தள்ளினான்.

"அம்மா!" என்று உரக்கக் குரல் கொடுத்தான். "அம்மா இதைக் கொஞ்சம் பிடிச்சுக்கயேன்."

'இது' என்றது அப்பாவை.

கிழவர் உள்ளே இழுத்துப் பிடிக்கப்பட, கிரில் கதவைத் திறந்தான். "சீக்கிரம் உள்ளே வா... இவர் வெளியே போயிட்டா ஆபத்து" என்றான்.

விளக்கைப் போட்டான். நான் நுழைந்ததும், கதவை மறுபடி சாத்திவிட்டான்.

கிழவர் நரைத்திருந்தார், சௌகர்யமற்ற ஷேவிங்கில் முகவாய்க்கும் கீழே நிறைய முடிகள் பாக்கி இருந்தன. முழு வேட்டியை ஈரத்துண்டு போல கட்டியிருந்தார். கண்கள் கிண்ணங்களில் மிதப்பவை போல உள் வாங்கியிருந்தன.

"சந்தானம் வந்திருக்கான்.. ஊர்லேர்ந்து, அவன் ஃப்ரெண்டும் வந்திருக்கான்" என்ற குரலை முதலில் கேட்டபிறகுதான் அந்த அம்மாவைப் பார்த்தேன்.

நரைத்த கூந்தல். மஞ்சள் பூசிய முகம். பற்களை மொத்தமாக இழந்து குழிந்திருந்த உதடுகள். உடல் செழிப்பாக இருந்தது. கண்களில் ஒளி இருந்தது.

"வாப்பா. சந்தானம் உன்னைப்பத்தி கார்டுல எழுதியிருந்தான்.. உக்காரு... இவரைப் பார்த்து பயப்படாத... பேச்சுத்தான் ஒரு



## அருள்வாக்கு

வேலா கத்தில் மனசுக்கு ரொம்பவும் ஆனந்தமாகவும் சாந்தமாகவும் இருக்கப்பட்ட பல விஷயங்களுக்கு அப்பர் ஸ்வாமிகள் ஒரு 'லிஸ்ட்' கொடுக்கிறார். இந்திரியங்களுக்கு அகப்படுகிற சுகங்கள் போல இருந்தாலும் நிரந்தரமான, தெய்விகமான ஆனந்தத்தைத் தருகிற வஸ்துக்களைச் சொல்கிறார். அந்த வஸ்துக்கள் என்ன? முதலில் துளிக்கூட தோஷமே இல்லாத வீணா கானம்; அப்புறம் பூரண சந்திரனின் பால் போன்ற நிலா; தென்றல் காற்று; வசந்த காலத்தின் மலர்ச்சி; வண்டுகள் ரீங்காரம் செய்து கொண்டிருக்கிற தாமரைத் தடாகம்.

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும்
போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே.

இந்திரியங்களால் பெறுகிற இன்பங்களை ஈசுவர சரணார விந்த இன்பத்துக்கு உபமானமாக அடுக்கும்போது "மாசில் வீணை" என்று சங்கீதத்துக்கே முதலிடம் தருகிறார்.

நல்ல சங்கீதம் - அதுவும் குறிப்பாக நம்மு

டைய சங்கீதத்துக்கே எடுத்த வீணையோடு கானம் - என்றால் அது ஈசுவரனின் பாதத்துக்குக் கொண்டு சேர்ப்பதாகவே இருக்கும். நம் பூர்வீகர்கள் இசையை ஈசுவரனின் சரணங்களிலேயே சமர்ப்பணம் பண்ணினார்கள். அந்த இசை அவர்களையும், அதைக் கேட்கிறவர்களையும் சேர்த்து, ஈசுவர சரணாரவிந்தங்களில் லயிக்கச் செய்தது. தர்ம சாஸ்திரம் தந்த மகரிஷி, யாக்ஞவல்கியரும், ''சுஸ்வரமாக வீணையை மீட்டிக் கொண்டு, சுருதி சுத்தத்தோடு லயம் தவறாமல் நாதோபாஸனை செய்துவிட்டால் போதும் - தியானம் வேண்டாம்; யோகம் வேண்டாம்; தபஸ் வேண்டாம்; பூஜை வேண்டாம்; கஷ்டமான சாதனைகளே வேண்டாம்; இதுவே மோக்ஷத்துக்கு வழிகாட்டிவிடும்'' என்கிறார்.

வீணா வாதன தத்வக்ஞ : ச்ருதி ஜாதி
விசாரத :
தாளக்ஞச்ச அப்ரயத்னேன
மோக்ஷமார்க்கம் ஸ கச்சதி ॥

இதிலே இன்னொரு விசேஷம், சங்கீத வித்வான் மட்டுமில்லாமல், அவன் கானம் செய்வதை வெறுமே கேட்டுக் கொண்டிருக்கிற அத்தனை பேருக்கும் அவன் ஒருத்தன் செய்கிற சாதனையின் பூரண பலனான நிறைந்த திவ்விய சுகம் கிட்டி விடுகிறது.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

மாதிரி இருக்குமே தவிர, சாது."

சந்தானம் பெட்டிகளை சுவரோரமாக வைக்க, கிழவர் பாய்ந்து அவன் கைகளைப் பிடித்துக் கொண்டார்.

"என்னை வெளியே கூட்டிப் போறியா? தம்பி... நீ என் மகன் மாதிரி..."

"மகன் மாதிரியா? நான் உங்க மகன்தான்'' என்று கைகளை விடுவித்துக் கொண்டான். "கொஞ்சம் நேரம் பேசாம உக்காரணும், புரியுதா?" என்று அவரை சோபாவில் அமுத்தினான்.

அவர் என் பக்கம் திரும்பினார். கள்ளமற்ற சிரிப்பு ஒன்றை உதிர்த்தார்.

"வாங்க, வாங்க- சரக்குலாம் வந்து சேர்ந்ததா?" என்று என் கைகளைப் பிடித்தார்.

"நீ கண்டுக்காத... இப்படித்தான் ஏதாவது பேத்திட்டிருப்பார்... அம்மா, சமையல் ரெடியா?"

"போன தடவை நீங்க கொடுத்த செக் திரும்பிடிச்சு..." என்றார் கிழவர். "பாங்க்ல பத்து ரூபா பிடிச்சிட்டாங்க..."

''அப்பா'' என்று அதட்டிய சந்தானத்தை அடக்கினேன்.

"அவர் என்கிட்ட தான பேசறார்... பேசட்டும்... நீ குறுக்க வராத..." என்றேன்.

கிழவருடைய விரல்கள் என் கைக்குள் நடுங்கின.

"இந்த தடவை பில் உங்களுக்கு சகாயமாத்தான் போட்டிருக்கேன்."

"இது நம்ம சந்தானத்தோட ஃப்ரெண்டு. உங்க பிஸினஸ் பார்ட்னரில்லை... கொஞ்ச நேரம் பேசாம இருங்க..." என்று அவர் மனைவி அவர் முகத்தருகில் மிரட்டிய போது, வாயை சற்றே திறந்து வைத்து அவளைப் பார்த்தார். அதட்டப்பட்ட குழந்தை போல சட்டென்று என் மடியில் தலைவைத்துப் படுத்தார்.

"எழுந்திருங்க.. எழுந்திருங்க சொல்றேன்.." என்று அவள் அதட்ட, கை தூக்கி சகஜமா இருக்கட்டும்... நானும் உங்க மகன் மாதிரிதான்..." என்றேன். கிழவர் மடியில் ஒடுங்கிப் படுத்திருந்தார். பாரமே இல்லை. எனக்குள் ஏதோ சுரந்தது. மனித வெப்பத்தில் சுகம் தேடும் ஒரு பூனைக்குட்டி போல் இருந்தார். தோளை வருடிக் கொடுத்தேன். என் கைகளுக்கு முத்தம் கொடுத்தார்.

திடீரென்று விலுக்கென்று எழுந்தார். "வந்துட்டேன்... இதோ வந்துட்டேன்..." வழுக்கும் வேட்டியை இழுத்துப் பிடித்தபடி கதவுக்கு ஓடினார்.

"யாரும் உங்களைக் கூப்பிடலை... உக்காருங்க..."

கதவுக்கு வெளியே இருட்டைப் பார்த்து, "என்னை கூட்டிட்டுப் போயேன்... ப்ளீஸ்... இங்க இருந்தா செத்துருவேன்..." என்று கிரில் கேட்டை உலுக்கினார்.

"மூணு மாசம் முன்னால அசந்த நேரத்துல வெளியே போயிட்டாரு... காலைல எட்டு மணிக்குப் போனவர்தான். வீடு எங்கே இருக்குனு மறந்து போச்சு. இத்தனைக்கும் சொந்தமா இவரே கட்டுன வீடு இது. இதே ரோட்டுல மூணு நாலு தடவை கிராஸ் பண்ணிப் போயிருக்காரு... எடம் புரியலை... எங்கெங்கியோ சுத்தி ராத்திரி ஒம்போது மணிக்கு பாங்க் வாசல்ல கண்டுபிடிச்சோம். நிம்மதியா படுத்திருக்காரு... எழுப்பினா, பாங்க் தொறக்கறதுக்காக வெயிட் பண்ணிட்டிருக்காராம். அப்புறம் ரெண்டாயிரம் செலவு பண்ணி இந்த கிரில் கேட் போட்டோம்.'' அவர் மனைவி கண்களில் வருத்தம் இல்லை. குற்றம்



"ஒரே வாரத்துல பத்து கிலோ வெயிட போட்டுருக்கீங்களே... எப்படி?"

"ரெண்டு பொதுக் குழுவுலயும் தலையக் காட்டினதால பலத்த விருந்து!"

- அம்பை தேவா

---

சாட்டுகிற ஒரு கோபம் இருந்தது.

"ஒரு எடத்துல உக்கார மாட்டாரு.. அம்மாக்கும் வயசாச்சல்ல... கூடவே எத்தனை நேரம் தான் சுத்த முடியும் சொல்லு..."

"ஏன் சந்தானம், பேசாம மெட்ராஸ்க்குக் கூட்டிட்டு வந்து உன்னோட வச்சுக்கிட்டா என்ன?"

"இங்க ஆறு கடை வாடகைக்கு விட்டுருக்கோம். மாடில நாலு போர்ஷன்ல குடியிருக்காங்க. இங்க நம்மாளு இல்லேன்னா ஏய்ச்சிருவாங்க. தண்ணி மோட்டார் சூடாகி ரிப்பேரானாக் கூட அவனுக்கு என்ன போச்சி? நீ வா, சாப்புடலாம்...."

கிழவரையும் கூப்பிடும் எண்ணத்துடன் தோளைத் தொட்டேன்.

"அடடே, நீங்க எப்ப வந்தீங்க? பாம்பேல நம்ம அயிட்டம் எப்படிப் போறது? உங்க லெட்டர் கெடைச்சுது. ஆனா அதுல ஒரு தப்பு இருக்கு..." விடுவிடுவென்று நடந்து அலமாரியிலிருந்து ஒரு பழைய நோட்டுபுத்தகம் கொண்டு வந்தார். பிரித்தார். குறுக்கே வந்த சந்தானத்தைத் தடுத்து விட்டேன்.

நோட்டுபுத்தகத்தில் குறுக்கும் நெடுக்கும் என்னென்னவோ எண்கள் கிறுக்கியிருந்தன.

"பில் நம்பர் ஒன் ஸீரோ டு ஸெவன்... ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பது ரூபா. வண்டிக் கூலி அறுபது ரூபா... ஆக ரெண்டும்..." என்றவர் கலைந்து, "இந்த தடவை செக் வேணாம், கேஷா கொடுத்திருங்க."

"தம்பி.. போறும்.. இதுக்கு முடிவே இருக்காது. ராத்திரி ஒரு மணிக்கு எழுந்து லைட்டைப் போட்டுக்கிட்டு இந்த நோட்டுல கிறுக்கிட்டிருப்பாரு... நீங்க கைகால் கழுவிட்டு சாப்பிட வாங்க..."

"ஆமாண்டா.. கொஞ்சம் நேரம் பீச்ல உக்காந்திட்டு வரலாம்" என்றான், சந்தானம்.

சாப்பிடும் போது, "இந்த மாசத்துல கூட காலி ஃப்ளவர் கெடைக்குதா அம்மா?" என்றான், ஆச்சரியமாக.

"ஒரு பூ ஆறு ரூபா! தம்பி வருதுன்னு சொன்னியேன்னு வாங்கினேன்."

"சந்தானம், டாக்டருங்க என்ன சொல்றாங்க?"

"எதைப் பத்தி? ஓ, அப்பாவையே நெனைச்சிட்டிருக்கியா? பிஸினஸ்ல பார்ட்னர் செமத்தியா ஏமாத்திட்டான். நண்பர்தானேன்னு கொஞ்சம் விட்டாரு... மொத்தமா சுருட்டி ஏப்பம் விட்டுட்டான்... அப்ப விழுந்ததுதான்... நெனைவு தப்பிடிச்சு... போன நிமிஷம் நடந்தது இந்த நிமிஷம் மறந்துடுது.. பார்த்தியே என்னையே மகன் மாதிரின்னாரு.."

கிழவர் சோபாவில் உட்கார்ந்து விரல் விட்டு எண்ணிக் கொண்டிருந்தார்.

"மெட்ராஸ்ல டாக்டர் ராமமூர்த்தி கிட்ட..."

"எவ்வளவோ செலவு பண்ணியாச்சு. மூளைக்கு முழுசா ரத்தம் போகாம பிளாக் ஆயிருச்சாம்... அமெரிக்காலேந்து கூட ஒரு மாத்திரை வரவழைச்சோம். என்ன வெலைம்மா அது?"

"இருபத்தெட்டு ரூபா.."

"ஒரு மாசம் தொடர்ந்து கொடுத்துப் பார்த்தோம்... ஒண்ணும் இம்ப்ரூவ் ஆகல... அவரையே நெனைச்சிட்டிருக்காதடா... சாப்புடு..."

ருசிக்கவில்லை.

சாப்பிட்டுக் கிளம்பினோம்.

காலண்டரில் ஏதோ பார்த்து நோட்டுப்புத்தகத்தில் குறித்துக் கொண்டிருந்த கிழவர் கதவு ஒலி கேட்டதும் தடதடவென்று ஓடி வந்தார்.

"அம்மா, பிடிச்சுக்கம்மா..."

தாழ்ப்பாள் ஒலியும், கிழவரின் புலம்பலும் கடைசிப்படி வரை கேட்டது.

"இரு, ரிக்ஷா பிடிக்கலாம்."

"ரிக்ஷா வேணாம் சந்தானம்... சும்மா ஒரு வாக் போலாமே..."

"டயர்டா இருக்குடா... திரும்பி வரும் போது வாக் வரலாம்," என்று எதிர்ச்சாரியிலிருந்து ரிக்ஷா பிடித்து வந்தான்.

ரிக்ஷா குலுங்கி நகர்ந்தது.

"ரிக்ஷாக்காரங்க அக்கிரமம் ஜாஸ்தி ஆயிடிச்சி... அஞ்சு ரூபா கேட்டான். நாலு ரூபா பேசியிருக்கேன்" என்று பாக்கெட்டிலிருந்து அந்த அட்டையை எடுத்தான். முழங்காலில் வைத்து 'ரிக்ஷா' என்று எழுத ஆரம்பித்தான்.

பாய்ந்தேன். அந்த கணக்கு அட்டையைப் பிடுங்கினேன். நாலாய், எட்டாய், நூறாய்க் கிழித்து காற்றில் பறக்க விட்டேன்.

"வேணாம், சந்தானம்" என்றேன், நடுங்கும் குரலில்.



• ஈ.கே. நாயனார்

திருவனந்தபுரம் தலைமைச் செயலகத்தில் கேரள முதலமைச்சர் ஈ.கே. நாயனாரைச் சந்தித்தோம். கண்ணூர் போகும் ரயிலைப் பிடிக்க வேண்டிய அவசரம். ஆனாலும், தனிச்செயலர் முரளிதரன் நாயர், 'கல்கி'யிலிருந்து நாம் வந்திருப்பதைத் தெரிவித்தபோது வரச் சொன்னார். "எனக்குச் சுத்தமாக நேரம் இல்லை. அதனால் நீங்கள் அச்சுதானந்தனைப் பாருங்களேன். உங்கள் கேள்விகளுக்கு அவர் நன்றாகப் பதில் சொல்லுவார்!" என்றார். வி.எஸ். அச்சுதானந்தனைச் சந்தித்தோம். இவர் சி.பி.எம்மின் முன்னாள் பொதுச்செயலாளர். இப்போது கட்சியின் பொலிட் பீரோ உறுப்பினர். கேரள அரசியலில் முதலமைச்சருக்கு அடுத்த படி பிரபலமானவர். மனத்தில் பட்டதைப் பளிச்சென்று சொல்லும் 'கேரளத்து ஹெக்டே.'

# தமிழகத்துக்குப் பாசன நீர்: வாரி வழங்குகிறாரா நாயனார்?

## –கேரளத்து 'ஹெக்டே' பேட்டி



• வி.எஸ். அச்சுதானந்தன்

"மூன்றாவது முறையாக நாயனார் முதலமைச்சர் ஆகி இருக்கிறார். இந்த ஒரு வருடத்தில் நாயனாரின் குறிப்பிடத்தக்க சாதனை என்று எதைச் சொல்லுவீர்கள்?"

"விலைவாசி உயர்விலிருந்து மக்களுக்குச் சிறிதேனும் ஆறுதல் அளித்ததுதான். 87 முதல் 91

வரையிலான இடதுசாரி முன்னணி ஆட்சியின் போதுகூட, இந்தியாவில் விலைவாசி உயர்வு 10 சதவிகிதமாக இருந்தபோது, கேரளத்தில் மட்டும் 4 சதவிகிதத்தைத் தாண்டவில்லை. அன்று ஒரு கிலோ அரிசி 2 ரூபாய் 59 பைசாதான். 92 முதல் 96 வரையிலான காங்கிரஸ் ஆட்சியில் இது ஆறு – ஆறரை ரூபாயாக உயர்ந்து விட்டது! இந்தப் பின்னணியில், இடதுசாரி முன்னணி மறுபடி இப்போது ஆட்சிக்கு வந்திருக்கிறது. அப்படியும் விலைவாசி உயர்வு மக்களை அதிகம் பாதிக்காத அளவுக்குக் கட்டுப்படுத்தி வைக்க முடிந்திருக்கிறது. 54 லட்சம் குடும்ப அட்டைதாரர்களுக்குச் சலுகை விலையில் அரிசி விநியோகிக்கிறோம். வறுமைக் கோட்டுக்குக் கீழே வாழும் சுமார் 25 லட்சம் கார்டுதாரர்களுக்கு, 50 சதவிகித விலையில் உணவுப் பொருட்களை வழங்குகிறோம்."

***"மின்சார உற்பத்தி அதிகரிக்கவில்லை என்கிறார்களே? பவர்கட் கூட இருக்கிறதே?"***

"கடந்த ஐந்து வருடங்களில் காங்கிரசின் ஐக்கிய முன்னணி ஆட்சியில் கூட இந்தத் துறையில் எதுவுமே செய்யவில்லையே! புனல் மின் நிலையங்கள் இயங்கத் தண்ணீர் இல்லாத போது, மற்ற வழிகளில் மின்சாரம் தயாரிக்க முயற்சிகளை மேற்கொண்டோம். டீசல் பிராஜக்ட் ஒன்று. இன்னொன்று, அனல்மின் நிலையம் – காயங்குளத்தில். மூன்றில் ஒரு பங்குத் தேவையைப் பூர்த்தி செய்ய முடியாத அளவுக்கு மின்சாரத் தட்டுப்பாடு இருக்கத்தான் செய்கிறது. அதனால்தான் இந்த நகரத்திலேயே கூட 'பவர்கட்' இருக்கிறது!"

***"முல்லைப் பெரியார் நதிநீரைத் தமிழகத்துக்குத் தாராளமாக வழங்கிக் கொண்டிருக்கிறீர்கள் என்று முதலமைச்சர் நாயனார் மீது குற்றம்சாட்டியிருக்கிறீர்களே?"***

"குற்றமாகச் சொல்லவில்லை. உள்ளதைத்தான் சொல்லுகிறேன். பாரதப் புழா, சாலக்குடிப் புழா, நீராப்புழா என்ற வடக்குப் பகுதி (கொச்சி – பாலக்காடு) நதிகளிலிருந்து வரும் நீர், தமிழ்நாடு – கேரளா ஆகிய இரண்டு மாநில மக்களும் பயனடையும் விதத்தில் பரம்பிக்குளம் – ஆளியாற்றுத் திட்டமாக உருவாக்கப்பட்டது."

***"அது ஈ.எம்.எஸ். – காமராஜ் ஆட்சிக் காலத்தில் அல்லவா தொடங்கப்பட்டது?"***

"அப்போது ஆரம்பிக்கப்பட்ட பேச்சுவார்த்தைகள் முடிந்தாலும், 1970ல் காங்கிரஸ் ஆதரவில் அமைந்த அச்சுதமேனன் ஆட்சிக் காலத்தில்தான் கையெழுத்தானது. கேரளத்தில் 20,000 ஹெக்டேர் நிலம் பயனடையவும், தமிழ்நாட்டில் 6,400 ஹெக்டேர் நிலம் பயனடையவும் இந்த ஒப்பந்தம் செய்து கொள்ளப்பட்டது. கேரளத்தில் முப்போகம் விளையும் என்று சொன்னார்கள். சிற்றூர்ப் புழையில் நீர் வரத்து இல்லாமல், முப்போகம் – இரு போகம் அல்ல, ஒரு போகம் கூட விளையாமல் கேரளம் அவதிப்பட்டது. அதே சமயத்தில் தமிழ்நாடு பயனடைந்தது. இது பற்றி விவாதிக்க 93ல் பாசனத்துறை அமைச்சர் டி.எம். ஜேக்கப் தலைமையில் ஒரு தனிநபர் கமிட்டி அமைக்கப்பட்டது. ஒரு வருட தீவிர ஆய்வும் நடந்தது. கேரளத்துக்கு இதனால் யாதொரு பயனும் கிடைக்கவில்லை!

"இப்போது முல்லைப்பெரியார் விஷயத்திலும் அப்படித்தான் நடந்திருக்கிறது. கேரளத்து சிவகிரிக் குன்றில் பெய்யும் மழைநீர், பழைய திருவிதாங்கூர் ஸ்டேட் – கோட்டயம், இடுக்கி வழியாக, எல்லையில் உள்ள தேக்கடி வந்து; முல்லைப்பெரியாரில் 8100 ஏக்கர் நிலத்தில் பாய்கிறது. தமிழ்நாட்டுக்குத் தண்ணீர் கொடுக்க வேண்டும் என்பதற்காகவே அங்கே கட்டிய அணைக்கட்டு இருக்கிறது. 1866ல், அதாவது சுதந்தரத்துக்கு முன்பே, பிரிட்டிஷ் அரசும் திருவிதாங்கூர் மகாராஜாவும் செய்து கொண்ட ஒப்பந்தப்படி, பாசனத்துக்கும் குடிநீருக்கும்தான் இந்த நீர். ஆனாலும் பழைய ஒப்பந்தப்படி, தமிழ்நாட்டுக்குத் தண்ணீர் பாட்டுக்குப் போய்க்கொண்டிருக்கிறது. இத்தனைக்கும் இதை அமைச்சரவையோ, சட்டசபையோ அங்கீகரிக்கவில்லை. இது சட்டசபைக் குழுவின் கருத்தும் கூட. எனவே இது சட்டரீதியாகச் செல்லாது.

"பரம்பிக்குளம் – ஆளியாறு தண்ணீர் தமிழ்நாட்டுக்குப் போய்க் கொண்டிருக்கும் அதே நேரத்தில், எல்லையிலுள்ள அட்டப்பாடியில் வசிக்கும் ஆதிவாசிப் பழங்குடியினர் நீர் கிடைக்காமல், தங்கள் இடத்தையே காலி செய்து கொண்டு போய்க் கொண்டிருக்கிறார்கள்.

"சிறுவாணி போலத்தான் இந்தப் பிரச்னையும். சிறுவாணி நீர் தமிழ்நாட்டுக்குக் கிடைக்கிறது. கேரளத்துக்குக் குறைச்சல்! இடதுசாரி முன்னணி 87-ல் ஆட்சிக்கு வந்து, 88ல் இதுபற்றி விவாதிக்கப்பட்ட பிறகும்; மீதி இருந்த 4 வருடங்களில் உருப்படியாக எதுவும் தீர்மானிக்கப்படவில்லை. கேரள மக்களுக்கு எதிரான அத்துமீறல்கள் தொடர்ந்து நடந்து கொண்டுதான் இருக்கின்றன. இதைத்தான் நான் எடுத்துச் சொன்னேன். நாயனார் மீது குற்றம் கூற வேண்டும் என்பதற்காக அல்ல! மேலும், 'தமிழ்நாட்டுக்குத் தண்ணீர் கொடுக்கக் கூடாது' என்பதல்ல என் வாதம். தமிழ்நாட்டுக்கும் கொடுப்போம். இடுக்கியில் குறிப்பிடத்தக்க அளவு நீர் இல்லை – அதனால் அந்தப் பகுதிக்கும் கொடுப்போம். இரண்டு பேருக்கும்

பயன்கிடைக்க வேண்டும். இதுதான் என் விருப்பம், வேண்டுகோள் எல்லாம்."

**''பாலக்காடு கலெக்டர் ரெட்டியை தக்லைலைட்டுகள், அலுவலகத்திலேயே சிறை வைத்த சம்பவம் உங்கள் ஆட்சிக்கு ஒரு களங்கமாக இல்லையா?''**

''இல்லை. இந்த அரசு கையாலாகாத அரசு என்று பிரசாரம் செய்வதற்காகவே, திட்டமிட்டு நடத்தப்பட்ட ஒன்பது மணி நேர நாடகம்தான் அது. ஐ.ஏ.எஸ். 'லாபி' செய்த மோசமான செயல். இல்லை என்றால், மிகுந்த பாதுகாப்போடு அலுவலகத்தில் செயல்படும் கலெக்டரை எப்படி நாலு பேர், கையைக் கட்டிப் போட்டு வைக்க முடியும்? ஒரு சீன் உண்டாக்க வேண்டியே செய்யப் பட்டது இது. கலெக்டருக்குப் போலீஸ் பாதுகாப்பு இருக்கிறதே? ஆட்களைச் செக் பண்ணாமல் யார் அனுப்பச் சொன்னார்கள்? கலெக்டருக்கு இன்டலிஜென்ஸ் ரிப்போர்ட்டுகள் வருவதில்லையா என்ன? அதிகாரிகள் அரசுக்குச் சாதகமாக இருந்து ஒத்துழைப்புத் தருவதற்குத்தான் இருக்கிறார்களே தவிர, அரசுக்கு எதிராகச் செயல்பட்டு, மக்கள் மத்தியில் அரசுக்குக் கெட்ட பெயர் வாங்கித் தருவதற்காக அல்ல. இதை அவர்கள் உணர்ந்தால் போதும்."

**"சி.பி.எம். தோழர்களும், சி.பி.ஐ. தோழர்களும் மோதிக் கொள்ளுவதாகச் சொல்லுகிறார்களே? இரண்டு குழுவினரும் தெருவில் வந்து சண்டை போட்டுக் கொள்ளும் அளவுக்கு வந்துவிட்டதாகவும், சி.பி.எம். ஆட்கள், நில ஆக்ரமிப்புச் செய்வதால்தான் இந்தத் தாக்குதலும் போராட்டமும் என்று பேசப்படுகிறதே?"**

"கிடையவே கிடையாது. அபிப்ராய வித்தியாசம் இல்லாமல் கட்சிகள் இருக்க முடியுமா? அது இருக்கத்தான் செய்யும். சிந்திக்காமல் வெறுமனே அடிதடி ரகளையில் சிலர் ஈடுபடலாம். அது கீழ் மட்டத்தில் நடந்திருக்கலாம். ஆனால் நீங்கள் சொல்லுவது போல நிலைமை மோசமாக இல்லை. எங்கள் போராட்டம் எல்லாம் காங்கிரசோடு. கம்யூனல் கட்சிகளோடு. பி.ஜே.பி, ஆர்.எஸ்.எஸ். போன்ற கட்சிகளோடு.. மதக்கலவரங்கள் எதுவும் எழாமல், மைனாரிடிகளின் பாதுகாவலர்களாக இருந்து வருகிறோம். அதனால் தான் அவர்களைத் தாக்குவதற்குப் பதில் பி.ஜே.பி.யும் ஆர்.எஸ்.எஸ்.சும் இடதுசாரிகளான எங்களைத் தாக்குகிறார்கள்."




"தொடர்ந்து லைப்ரரி போயிக்கிட்டு இருக்கியே, உன் அறிவு எதுவரைக்கும் வளர்ந்திருக்கு?"
ஹி...ஹி...காதல் வரைக்கும்தான்!"
— காழி. ஆர். சீதாராமன்

**"விக்கர் லாபி'க்குப் பணிந்து, இருநூறு சதவிகித கலால் வரியைப் பாதியாகக் குறைத்து விட்டீர்களாமே?"**

"தமிழ்நாட்டில் 50 சதவிகிதம் இருந்த போது, அந்தோணி அரசு அதை 200 சதவிகிதமாக உயர்த்தியது. இங்குள்ள வேலை இல்லாதவர்கள் எல்லாரும் ஸ்கூட்டரை ஓட்டிக் கொண்டு பார்டர் பகுதிக்குப் போய் விக்கர் வாங்கி வந்து ஒரு மணி நேரத்தில் 2000 ரூபாய் சம்பாதிக்க அது வழி செய்து கொடுத்தது! நாங்கள் அதை நூறு சதவிகிதம் ஆக்கினோம். அவ்வளவுதான். பிறகு 125 சதவிகிதமாக்கினோம். விக்கர் லாபிக்குப் பயந்து இதைச் செய்யவில்லை."

**"கருணாகரன் – அந்தோணி அரசியல் நிலைகள் பற்றி என்ன கருதுகிறீர்கள்?"**

"கருணாகரன் வயதானவர்களை வைத்துக் கொண்டு அரசியல் நடத்துகிறார். அந்தோணி இளைஞர்களை இழுத்துக் கொண்டு அரசியல் பண்ணுகிறார். இரண்டு பேருமே ஊழல் பெருச்சாளிகளைப் பாதுகாப்பதில்தான் அக்கறை காண்பிக்கிறார்கள். அந்தோணி தனிப்பட்ட முறையில் ஊழலில் சிக்காதவர் என்றாலும், அவர் கட்சியில் ஊழல்காரர்களுக்கு வசதியான இடம் உண்டு!"

**"கேரள அரசியலில் கலர்ஃபுல் பாலிடீஷியன் நீங்கள். அப்படி இருந்தும் ஒரு முறைகூட அமைச்சராகவோ, சபாநாயகராகவோ பதவி வகிக்கவில்லையே, ஏன்?"**

"நான் மக்களின் தோழன். அவர்களின் பிரதிநிதியாகச் செயல்படுவதில்தான் எனக்குப் பெருமை. பதவி எனக்கு முக்கியமல்ல. மக்களைப் பாதிக்கும் பிரச்னைகளுக்கு விடிவு காண்பது ஒன்றே என் குறிக்கோள்."

திருவனந்தபுரத்திலிருந்து : **சாருகேசி**
புகைப்படங்கள் : **ஸ்ரீஹரி**

11

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

அன்ன சூக்தத்திலே என்ன சொல்லப்பட்டிருக்கிறது தெரியுமோ...? 'ஒருத்தன் நிறைய சாப்பிட்டானானால் அவனை நான் சாப்பிட்டு விடுவேன்!' என்று சொல்லியிருக்கிறது.

'பிரஸாதம் தானே' என்று நிறைய சாப்பிட முடியுமா...!

அன்னத்தை பரப்ருஹ்மமாக உணர்ந்து சாப்பிட்டோமானால் எந்த அளவு சாப்பிட வேண்டும் என்பது நமக்கு வசப்படும். அப்போது அதை ஜீரணிக்கும்படியான உடல்பாங்கு நமக்கு இருக்கும். இதுதான் மனிதனுக்கு ஆனந்தம். அப்படிப்பட்ட உயர்ந்த தேக ஆரோக்கியத்தை நமக்கு எம்பெருமான் அளிக்கிறான்.

மோக்ஷத்தை அருளுகின்ற அதே ஆண்டவன்தான் இந்த உலகத்தில் வாழ்க்கைக்குத் தேவையான சமஸ்தவிதமான சரீராரோக்கியாதிகளையும் கொடுத்து, தேகம் தளர்கிறவரை காப்பாற்றுகிறான். தளர்கிற காலத்தில் மோக்ஷத்தை அருள்கிறான்! அப்படி அருள்பவனே விஷ்ணு சப்தத்தினால் சொல்லப்படுகிறான்.

விஷ்ணு சஹஸ்ரநாமத்தை ஆசார்யர்கள் வியாக்யாயனம் பண்ணும்போது, ஆதித்ய புராணத்திலிருந்தும் விஷ்ணு புராணத்திலிருந்தும் அனேகம் மேற்கோள்கள் எடுத்துக் காட்டுகிறார்கள். ஆனந்த தீர்த்தர் 'விஷ்ணு என்றால் யார்?' என்பதை எடுத்துக் காட்டுகிறார். திரிபதாச்சார்யர்களும் உயர்த்திச் சொல்லும்படியான விஷ்ணுபதத்தை யார் உணர்கிறார்களோ... அவர்களுக்கு விஷ்ணு பதம் (ஸ்ரீவைகுண்டம்) கிடைக்கும் என்கிறார்.

அதனால் அவனை பரோமா என்று அழைக்கிறார்கள். அவனைக் காட்டிலும் மேம்பட்டவன் இல்லை என்பது அர்த்தம். அவனுக்கு ஒப்பாரும் இல்லை. மிக்காரும் இல்லை. அப்படிப்பட்ட ஏற்றமுடையவனானதாலே பரம சப்தத்தினால் சொல்லப்படக்கூடியவன் பரமாத்மா.

ஆஸ்திக சமாஜத்துக்குப் போயிருந்தேன். அன்றைய தினம் சர்க்கரைப் பொங்கல் வினியோகம் நடந்தது. வாங்கிச் சாப்பிட்டவர் சொல்கிறார். "அந்த சர்க்கரைப் பொங்கல் எப்படி இருந்தது தெரியுமா...? திருவல்லிக்கேணி சர்க்கரைப் பொங்கலை உயர்த்தி என்று சொல்வார்கள். அதைக் காட்டிலும் உயர்த்தியாக இருந்தது. பரம யோக்யமாக இருந்தது."



'பரம' யோக்யம் என்றால் என்ன அர்த்தம்...? அந்த சர்க்கரைப் பொங்கலுக்கு ஈடு இணை இல்லை என்று அர்த்தம்.

இப்படிப்பட்ட சமயத்தில்தான் பரம சப்தத்தை உபயோகிக்கிறோம்.

பரமம் பதம் என்கிற போது விஷ்ணுவினுடைய பதம் உயர்ந்தது: விஷ்ணு என்கிற பதமும் உயர்ந்தது என்று பொருளாகிறது. முதல் வாக்கியத்தில் பதம் என்பது அவன் திருவடி நிழலாகிற இடத்தைக் குறிக்கிறது. இரண்டாவது பதம் 'விஷ்ணு' என்கிற பெயரைக் குறிக்கிறது.

அந்தத் திருவடி நிழலாகிற இடத்துக்குப் போய் விட்டோமானால் திரும்பி வராத சாஸ்வதமான நித்யானந்தத்தை அந்த வானிலவரசிலே நாம் அடைய முடியும்.

அப்படிப்பட்ட ஏற்றமுடைய பதத்தைக் கொடுக்குபடியான திவ்யமான பதம் இது.

ஆதித்ய புராணம் நம்மைப் பார்த்துக் கேட்கிறது. "எல்லா இடத்திலும் அவன் தெரிகிறானே... அவன் இருப்பது உன் கண்ணுக்குத் தெரியவில்லையா...?" என்று.

ஆனால் நமக்கு எங்கே தெரிகிறது? நாம் வஸ்துவை வஸ்துவாகப் பார்க்கிறோம். மனிதரை மனித ரூபத்தில் பார்க்கிறோம். நமக்கு உள் பார்வை என்பது கிடையாது. உன்னுக்குள்ளே ஆத்ம தரிசனம் ஏற்பட்டால் அன்றி அந்தராத்மாவான பரமாத்மாவைப்

# குறையொன்று




பார்க்கும் சக்தி நமக்கு ஏது?

ஒருத்தருக்கு ப்ரும்ம சூத்ரம் முழுதும் மனப்பாடம். அதனுடைய பாஷ்யம் மொத்தமும் மனப்பாடம். நாலாயிர திவ்ய பிரபந்தம் முழுதும் மனப்பாடம். வேதம் முழுதும் மனப்பாடம். ஆனால் ஒப்பிக்கத்தான் தெரிகிறதே யொழிய, அவற்றின் உள்ளேயிருக்கிற பரவஸ்துவைப் பார்த்திருக்கிறாயா? என்று கேட்டால்... என்னத்தைச் சொல்வது!

'ஆஹா! பார்த்திருக்கிறேன்!' என்று யாரால் சொல்ல முடியும்? புத்தகத்தைப் படித்தும் கேட்டும் தெரிந்து கொள்கிறோமேயொழிய அதைத் தெரிந்து கொள்கிற சக்தியை' நாம் பெறவில்லை.

மகான்களான மஹரிஷிகள் எல்லாம் அந்த சக்தியைப் பெற்றிருந்தார்கள். ரிஷி என்கிற சொல்லுக்கே என்ன பொருள் என்று பார்த்தால், 'பார்ப்பதனால் அவர்கள் ரிஷிகள்' என்று பொருளாகிறது.

# யில்லை

பார்ப்பதனால் என்றால் என்ன அர்த்தம்? உள்ளுக்குள்ளேயே இருக்கிற பரப்ரும்மத்தை அவர்கள் பார்க்கிறார்கள். நாமோ வெறும் வெளித் தோற்றத்தைப் பார்க்கிறோம்.

எல்லாமே பரப்ரும்மம் என்பது உபநிஷத் மஹா வாக்கியம்.

ஸ்ரீமத் பாகவதம் ஆரம்பத்திலே சொல்லப் பட்டிருப்பதைப் பார்க்கலாம். உலகனைத்திலும் எல்லா பதார்த்தங்களிலும் பரமாத்மா புகுந்து வியாபித்து நிற்கிறான்.

வியாபக மந்திரங்கள் அவ்வியாபக மந்திரங்கள் என்று இருவகை சொல்வதுண்டு. அதில் வியாபக மந்திரமாக இருக்கக் கூடியது நாராயண மந்திரம். வியாபகம் என்றால் எங்கும் நிறைந்திருத்தல் என்று பொருள். எங்கும் நிறைந்திருப்பவனைத் தன்னுள் அடக்கிய மந்திரம் அது.

உலகில் அனைத்துக்கும் காரணம் அவனே; அகாரணமும் அவனே; காரியம் அவனே; அகாரியமும் அவனே! அவனே காரணமுமாகி காரணமில்லாதவனுமாகிறான் என்றால் அது எப்படி...?

ஆனந்ததீர்த்தர் அகாரணத்துக்கு அழகாக விளக்கம் சொன்னார்.

காரணம் என்றால் அவன்தான் எல்லாவற்றுக்கும் மூலம் என்று தெரிகிறது.

அகாரணம் என்றால் 'காரணமல்ல' என்று அர்த்தமில்லை; 'அயேவ காரணம்' என்று அர்த்தம்.

அயேவ காரணம்..? 'அ' என்கிற அக்ஷரத்துக்குக் காரணமானவன். உரியவன் என்பது பொருள். (பிரணவத்தின் முதல் அக்ஷரமான 'அ' என்பதற்குப் பொருள் ஏற்கெனவே சொன்னேன்).

ஆகையினால் 'அகாரணம்' என்றால் 'காரணமில்லை' என்று எதிர்மறைப் பொருள் கொள்ளக் கூடாது.

இதை சாஸ்திர திருஷ்டியாகப் பார்த்தால் இன்னும் நன்றாக விளங்கும்.

'வியாப்ய, வியாபக ரூபனே' என்று தர்க்க சாஸ்திரத்தை வைத்து நிர்ணயம் பண்ணியிருக்கிறார்கள். 'சர்வத்துக்கும் காரணமான வஸ்துவை நீ உணர வேண்டும். அந்த வஸ்துவினுடைய ஞானம் உனக்கு ஏற்பட வேண்டும்' என்கிறது உபநிஷத்.

பானை இருக்கிறது அதை உருவாக்க மனித சக்தி தேவை.

மண்ணும் தேவை.

மண்ணும் சக்தியும் தனித்தனியே இருக்க 'பானை, பானை' என்றால் பானை வருமா...! அதற்கொரு தண்டமும் சக்கரமும் கருவிகளாகத் தேவை. ஆக மண் - பானையாக உருமாறுகிற மண் - மூல வஸ்து என்பது உபாதான காரணம். அந்த வஸ்துவை உருவாக்கக் கூடிய சக்தி நிமித்த காரணம். மண்ணையும் சக்தியையும் சக்கரமும் தண்டமும் சஹகாரி (உபகரிக்கிற) காரணம்.

இந்த உலகமானது பானை செய்தல் என்கிற காரியம் எனக் கொள்வோம். அதற்கும் மூன்று காரணங்கள் இருக்க வேண்டும் இல்லையா?

இந்த மூன்றும் தனித்தனி காரணங்களல்ல; ஒன்றேதான்!

நிமித்த காரணம் யார்...? பரமாத்மா
உபாதான காரணம் யார்...? பரமாத்மா
சஹகாரி காரணம் யார்...? பரமாத்மா!

அவனைத் தவிர மற்றொன்று காரணமில்லை என்னும் போது 'அகாரணம்' என்கிற பதத்துக்கு அர்த்தம் கிடைத்து விடுகிறதல்லவா!

அவன்தான் காரியம் - அதாவது உலகம். மண் பானையாக மாறுவது போல் அவனே உலகமாக மாறுகிறான். தைத்ரிய உபநிஷத்தில் இது வருகிறது. ஒன்றாக இருக்கக்கூடிய பரமாத்மா 'பலவாகக் கடவேன்' என்று சங்கல்பம் செய்து கொள்கிறான். உடனே பலவாக மாறுகிறான்! நரசிம்மாவதாரமே இதற்கு உதாரணமில்லையா! அவன் ஒருத்தனே பல இடங்களில் அமர்ந்திருக்கிறான்.

ஆகையினாலே, விஷ்ணுவே நம: என்று சொன்னால் ஜகத்துக்கெல்லாம் அவன் காரணம் என்று ஆகிறது. எல்லா காரணங்களுமாக அவனே இருந்து பிரபஞ்சமாகிற காரியத்தை உண்டு பண்ணுகிறான்.

தைத்ரிய உபநிஷத்தில் வருணனின் திருக்குமாரரான பிருகு மஹரிஷி பற்றி வருகிறது. அவர் அப்பாவிடம் போய் பரப்ரும்மம் என்றால் என்ன என்று கேட்கிறார். அதற்குத் தந்தை சொல்கிறார்.

"இந்த உலமெல்லாம் எதனிடத்திலிருந்து உண்டாயிற்றோ, எதனால் இது நிலைபெறுகிறதோ, எதில் சென்று முடிகிறதோ அதை நீ உணர்வாயாக. அதை நீ உணர வேண்டுமென்றால் போய் தவம் செய்ய வேண்டும்... சொன்ன வாக்கினாலே அதைப் புரிந்து கொள்ள முடியாது. மேலும், நான் சொன்னதால் 'இதுதான் பதில்' என்று நினைக்காதே. நீயே போய் தவம் செய்து தெரிந்து கொள்."

உடனே மகன் போனார். தவம் செய்தார். செய்ததும் தெரிந்து கொண்டார்.

ஆசார்யரிடத்திலே ஓடிவந்து சொல்கிறார். சந்தோஷமாகச் சொல்கிறார்: "நான் பரப்ரும்மத்தைத் தெரிந்து கொண்டேன்!"

"என்ன தெரிந்து கொண்டாய் நீ.....?"

அதற்கு ஆச்சர்யமான பதில் ஒன்று வந்தது! அதை அடுத்த வாரம் சொல்வேன்!

(தொடரும்)



GURUDEV

# சுராணா



## ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட்

(முந்தைய பெயர் S.U.S. ஃபைனான்ஷியர்ஸ் (இந்தியா) லிமிடெட்)

Group of Surana

1971 முதல்

## இரும்பு போன்ற உறுதி, தங்கம் போன்ற நாணயம் கொண்ட குழுமத்தின் ஒரு அங்கம்.

## சுராணா அளிக்கும் முதலீடு திட்டங்கள்

## ஆண்டுக்கு வட்டி விகிதம் 15%

CARE
மதிப்பீட்டாளர்களால்
"போதுமான பாதுகாப்பு"
சான்றிதழ் பெற்றது.
(BBB+)

சுராணா நிறுவனங்கள் 1971 முதல் இயங்கி வருபவை. 25 ஆண்டு அனுபவம் பெற்றவை.

சுராணா நிறுவனங்கள் இரும்பு உற்பத்தி, இரும்பு வியாபாரம் முதலிய தொழில்களில் ஈடுபட்டுள்ளன. இக்குழுமம் தென்னகத்தில் இரும்பு வியாபாரத்தில் முதலிடம் வகிக்கிறது.

குழுமத்தின் மொத்த விற்பனை அளவு ரூ.125 கோடி.

சுராணா ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட் (SFCIL), ஹயர் பர்ச்சேஸ், லீசிங், பில் டிஸ்கௌண்டிங், ஃபாரின் எக்ஸ்சேஞ், பப்ளிக் டிபாசிட் போன்ற பல வகைப்பட்ட நிதி நிர்வாகத்தில் ஈடுபட்டுள்ளது.

### SCHEME 1 - FIXED DEPOSITS

| Period (Months) | Rate of Interest per annum |
|---|---|
| 12 | |
| 24 | 15.00% (Monthly) |
| 36 | 15.19% (Quarterly)* |
| 48 | 15.48% (Half-yearly)* |
| 60 | |

1. Minimum Amount of Deposit is Rs.3,000/-
2. Minimum Amount of Deposit for Monthly Interest is Rs.10,000/-
* Interest at 15% Compounded at Monthly rests.

### SCHEME 2 - GURUDEV CERTIFICATE
(Cumulative Deposit)

| Period (Months) | Minimum Amount (Rs.) | Maturity Value (Rs.) | Maturity Value for Rs. 1,000/- | Annual Yield% (Simple Interest) |
|---|---|---|---|---|
| 12 | 3,000 | 3,482 | 1,161 | 16.06 |
| 24 | 3,000 | 4,042 | 1,347 | 17.36 |
| 36 | 3,000 | 4,692 | 1,564 | 18.80 |
| 48 | 3,000 | 5,446 | 1,815 | 20.38 |
| 60 | 3,000 | 6,321 | 2,107 | 22.14 |

1. Minimum Amount of Deposit is Rs.3,000/-
2. Addition in Multiples of Rs.1,000/-
3. Interest at 15% Compounded at Monthly rests.

### SCHEME 3 - SURYODAY CERTIFICATE
(Cumulative Deposit)

| Period (Months) | Principal (Rs.) | Maturity Value (Rs.) | Annual Yield% (Simple Interest) |
|---|---|---|---|
| 12 | 862 | 1,000 | 16.01 |
| 24 | 742 | 1,000 | 17.38 |
| 36 | 639 | 1,000 | 18.83 |
| 48 | 551 | 1,000 | 20.37 |
| 60 | 474 | 1,000 | 22.19 |

Interest at 15% Compounded at Monthly rests.


**சுராணா ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட்**

குரூப் ஆப் சுராணா

நெ. 16, ஒயிட்ஸ் சாலை, இரண்டாவது மாடி,
சென்னை - 600 014.

போன் : 8543145 / 8522684 / 8525596 / 8525396 / 8525694

ஃபாக்ஸ் : (044) - 8520587.

கிளைகள் : திருச்சி போன்: 461821, கொச்சிட்டம் போன்: 77454, சங்கரன்குடி போன்: 85423, 85536, பெங்களூர் போன்: 2287143, எர்ணாகுளம் போன்: 374617, கோயம்புத்தூர், ஆகிய இடங்களில் உள்ளன.


29.9.96 தேதியிட்ட மக்கள் குரல், Trinity Mirror நாளிதழ்களில் வெளியான சட்டபூர்வமான விளம்பரத்தின் தொடர்ச்சி

ADWAVE/SFC/5420

**தூ**ங்கிக் கண்விழித்ததும் ஜின்னிக்கு சிரிப்புதான். மாயாஜாலம் போல மனசை மாற்றும் சிரிப்பு. மூன்று மாதம் முடிந்து நான்கு ஓடுகிறது. கைக் குழந்தை.

ஷேவிங் நுரையோடு தற்செயலாகத் திரும்பினான் அதியமான்.

# குளிப்பாட்டுதல்

ஜின்னி சிரித்துக் கொண்டிருந்தது.

எந்தப் பறவை, எந்தப் பூ இப்படி சிரிக்கும்?

யார் கற்றுத் தந்தது?

அவனுக்கு ஞான மேரி நினைவு வந்தது. சிசுவான ஜின்னி யைக் குளிப்பாட்ட வந்தவள்.

அவள்தான் சிரிக்க வைத்தாள்.

சிரித்துச் சிரித்துக் கற்றுக் கொடுத்தால் குழந்தைகள் சிரிக்கின்றன, நிலா வெளிச்சம் போல ஆனந்தம் கொப்புளிக்க.

"காஞ்சனா!" சமையலறைப் பக்கம் திரும்பிக் கூப்பிட்டான்.

"என்ன?" குரல் மட்டும் வந்தது. அதிகாரமாக.

"ஜின்னி முழிச்சிட்டா."

"முழிச்சுட்டா தூக்குங்களேன்!"

"நான் ஷேவ் பண்றேன்."

## வையவன்

"நான் சமையல் பண்றேன்."

குரல் உயர்த்திப் புண்ணிய மில்லை.

இது போலீஸ் ஸ்டேஷன் அல்ல. தான் சப் இன்ஸ்பெக்டர் அதியமானுக்கு அடங்கிய கான்ஸ்டபிள் அல்ல. இவ்வளவு கேட்க வேண்டி வரும்.

சில சமயங்களில் சுப்ரீம் கோர்ட் தீர்ப்பிலிருந்து மேற்கோள்கள் கூட கிட்டும்.

திரும்பினான்.

இன்னும் ஜின்னி சிரித்துக் கொண்டிருந்தாள்.

அவனுள் நட்சத்திரங்கள் முளைத்தன. ஒன்று, இரண்டு... கணக்கற்றவை. என்ன குதூகலம்!

அடிக்கடி மாறும் ஆளும் கட்சிப் பிரமுகர்களின் உதை பந்து உத்தியோகம் பார்த்தாலென்ன?

மேலிடத்து மேய்ப்பர்களின் சுய பாதுகாப்புச் சவுக்கடிகளுக்கு எத்தனை தடவை முதுகு காட்டினால் என்ன?

வக்கீல் மனைவியின் குற்ற விசாரணைக் கூண்டில் ஏறி ஏறி நின்றாலென்ன?

சமூக சக்திகளின் பயம் கலந்த விரோதத்தை அன்றாடம் சந்திக்க நேரிட்டால் என்ன?

தூங்கி விழித்ததும் அற்புதமாகச் சிரிக்கிற ஒரு பெண் குழந்தை உண்டு!

ஜின்னி. மேக மண்டலத்திற்கு ஏந்திச் செல்லும் குஞ்சுப் புறா.

ஷேவிங் கிரீம் நுரையோடு அதியமான் நாற்காலி நகர்த்தி எழுந்தான்.

குழந்தையைத் தொட்டிலில் இருந்து தூக்கினான்.

ஜின்னி சிரித்துக் கொண்டே கைவிரல் நீட்டியது.

நுரை எட்டாதவாறு தலை சாய்த்து அவளை மார்பில் தழுவிக் கொண்டான்.

அந்த மிருதுவான உடம்பு அவன் மேல் படர்ந்து ஏதோ செய்தி பரிமாறியது. யுக யுகாந்திரங்களின் செய்தி. நான் மகன். நீ தந்தை, வம்சச்



சங்கிலியின் புதிய கண்ணி. உன் தேம் என் வசம். உன் குலம் என் கதிர்மணிகளின் ஒளிக்கரு.

நான் ஆனந்த ஊற்றின் பிரவேச வாயில்.

சப் இன்ஸ்பெக்டர் அதியமானின் கல்லூரிக் கவியரங்க முயற்சிகள் சுத்தரித்து அறுந்தன. எதிர்பார்த்தபடியே அவன் லுங்கியில் ஜின்னி சிறுநீர் கழித்தாள்.

ஜின்னியைச் சுத்தம் செய்தான். வந்து டவலில் அவனைத் துடைத்தான். ஜின்னி சிரித்தது.

அவளையே பார்த்துக் கொண்டிருக்கிறோம்!

அந்த உணர்வு எழவே மணி பார்த்தான். ஏழு.

எட்டு மணிக்கு மூன்றாவது தடுப்பூசி போட வேண்டும். ஜின்னிக்கு டாக்டரிடம் அப்பாயிண்ட்மெண்ட் வாங்கி இருந்தான்.

ஒன்பது மணிக்கு காமராஜ் அரங்கில் பந்தோபஸ்த். யாருக்கோ பொன்விழாவோ மணி விழாவோ!

அமைச்சர் வந்து போனதும் உச்சி வெயில் பன்னிரெண்டு மணிக்கு ஏரோட்ராம் போக வேண்டும். மத்திய அமைச்சர் வரப் போகிறார்.

ஐந்து மணிக்கு சிரணி அரங்கு நோக்கி ஒரு பேரணி.

ஆறு மணிக்கு ஓய்வு பெற்ற போலீஸ் அதிகாரி ஒருவருக்கு ஹோட்டல் பிரஸிடெண்டில் ஒரு பாராட்டு விழா. அவர் நிறையக் குளிப்பாட்டுதல்களை எதிர்பார்ப்பவர்.

எட்டு மணிக்காவது எட்டிப் பார்த்து விட வேண்டும். இல்லையென்றால் மோப்பம் பிடித்து, வைக்க வேண்டிய வத்தியை உரிய இடத்தில் வைத்து விடுவார்.

“ப்ப்பா!” ஜின்னி பேசி அவன் கவனம் கவர முயன்றாள். அவன் உச்சி மோந்தான். கன்னத்தில் முத்தமிட்டான்.

குளிப்பாட்டுதல் நினைவு வரவும் இன்று ஜின்னியைக் குளிப்பாட்டுவது யார் என்ற கேள்வி எழுந்தது.

சிசுப்பருவத்தில் அதியமான் அம்மாவின் நீட்டிய கால் மீது கவிழ்ந்து படுத்தால் எத்தனை சொம்பு தண்ணீர் ஊற்றினாலும் தலை தூக்க மாட்டானாம்.

அம்மா சொல்வாள். காஞ்சனா?

கைக்குழந்தையாய் இருக்கும்போது காஞ்சனாவைக் குளிப்பாட்டியது யார்?

கேட்டதில்லை. அவளும் சொன்னதில்லை.

"நாம் மிகவும் நெருங்கி இருக்கிறோம். அதிகம் விலகி வசிக்கிறோம்" என்றான் ஒரு நாள்.

அன்று சமாதானம். சமரசத்திற்குப் பின் வந்த சமாதானம்.

"இட்ஸ் பெட்டர்" என்றாள் காஞ்சனா.

"ஐ லவ் யூ."

"ப்ச்" என்றாள் அவள். அசுவாரஸ்யமாக.

"காஞ்சனா... காஞ்சனா. நான் சொல்றது சத்தியம்." அதியமான் குரல் உருகிற்று.

"நான் மறுத்தேனா?" என்று திருப்பிக் கேட்டாள்.

அவளது இரண்டு கைகளையும் ஏந்திப் பிடித்து நெற்றியை அவற்றின் மீது கவிழ்த்துப் புரட்டினான்.

"என்ன அசட்டுத்தனம்" அவள் கைகளை உருவிக் கொண்டாள்.

"நீ என்னை நம்பலே."

"அப்படி நான் சொல்லலியே!"

"ஏன் ஞானமேரியை வரவேண்டாம்னு சொன்னே?"

"....."

"ஜின்னி ரொம்பச் சின்னவ. அவளைக் குளிப்பாட்ட எனக்கும் தெரியாது. ஒனக்கும் தெரியாது. அவ அற்புதமாக் குளிப்பாட்டினா. மூன்று நாள் சிசுவா இருந்ததிலே பிடிச்சு குளிப்பாட்டினா."

காஞ்சனா நிமிர்ந்து அவன் கண்களை ஊடுருவினாள். அது ஒரு துப்பறியும் பார்வை.

அவன் நேர்மையைச் சந்தேகிக்கும் கூர்மை.

காஞ்சனா தொடர்ந்து பார்த்துக் கொண்டே இருந்தாள்.

தன் உத்தியோகத்தின் பலவீனங்களுக்கும் பழிச் சொற்களுக்கும் அதியமான் தலைகுனியும் சந்தர்ப்பம் நேர்ந்ததுண்டு.

இது அப்படியல்ல. ஆனால் அவள் நம்பவில்லை.

ஞானமேரி இரண்டு தொடைகளும் தெரிய சேலை வழித்து ஜின்னியைப் படுக்க வைத்துக் குளிப்பாட்டுவாள். அது அவள் பாணி. தான் பொறுப்பல்ல.



ஒருவர் : எதுஎதுக்குத்தான் 'பட்டிமன்றம்' நடத்தறதுங்கற விவஸ்தையே இல்லாமப் போச்சு...

மற்றவர் : ஏன் அப்படி சொல்றீங்க?

ஒருவர் : பின்னே என்னங்க? 'அரசியல் கட்சியா? ஆங்கிலப் பள்ளியா? அதிக லாபம் தருவது எது?' அப்பிடின்னு பட்டி மன்றம் நடத்தறாங்களாம்...

— தேவந்தி துரைராஜ்

ஜின்னி அந்தக குளிப்பாட்டுதலை மிகவும் நேசித்தாள். கிளு கிளுத்துச் சிரித்தாள்.

ஞானமேரி அதை மிகவும் ரசித்தாள்.

ஜின்னியை மேலும் சிரிக்க வைப்பாள். அவள் குளிப்பாட்டும் கலையில் அவன் மனம் தோய்ந்து ஈடுபடுவான். விடாது கவனிப்பான்.

இரண்டு மாதங்களில் ஞானமேரிக்கும் ஜின்னிக்கும் இடையில் ஒரு தனி உறவுப் பாலம்.

ஞானமேரி ஃப்ளாட்டில் நுழைந்ததும் ஜின்னி துள்ளிக் குதித்து குதூகலிக்கத் தொடங்கிவிடுவாள்.

குளிப்பாட்டி முடிந்தும் ஞானமேரி போய் விட மாட்டாள். பவுடர் பூசுவாள். ஜின்னிக்கு கருகருவென்று நிறையத் தலை முடி. லேசாக எண்ணெய் தடவி நோவாமல் தலை சீவி விடுவாள்.

கவுனைப் போடுவாள்.

ஃபீடிங் பாட்டிலில் பால் புகட்டி விடுவாள்.

ஒரு மணி நேரம் இருப்பாள். பிரிய மன மில்லாமல்தான் போவாள்.

முதல் மாதம் முடிகிறவரை காஞ்சனாவின் மனோநிலை வேறுவிதம். பேசாமல் ஞான மேரியை வீட்டு வேலைக்கு வைத்துக் கொண் டால் என்ன?

மாதம் முடிந்தது. இருநூறு ரூபாயை ஞான மேரியிடம் நீட்டினாள் காஞ்சனா.

"எதுக்கும்மா?"

"வச்சுக்க."

"வேண்டாம்மா."

"அதிகமா வேணுமா?"

"சீச்சீ!" ஞானமேரி வாங்கிக் கொள்ளாமல் நின்றாள்.

"வேலை செய்யறே. சம்பளம் வாங்கிக்க."

"என்னம்மா சொல்றீங்க. கொயந்தைய குளிப்பாட்டறேன். இது ஒரு வேலையா? சந்தோஷம்."

எவ்வளவு வற்புறுத்தியும் ஞானமேரி சம் பளம் வாங்கிக் கொள்ளவில்லை.

காஞ்சனாவின் முகம் கறுத்தது.

அவளை ஊடுருவிப் பார்த்தாள்.

முப்பது நாட்களில் அலட்சியம் செய்த ஞானமேரியின் உடல் கவர்ச்சி முதன்முறை யாக காஞ்சனாவின் கண்களில் பட்டது.

நாற்பது வயதா இவளுக்கு? நம்புவது கஷ்டம்.

மீனும் இறைச்சியும் தின்று, மேனி கொழு கொழுவென்றிருந்தது. உயரம். பருமன். உதடும் பருத்திருந்தது.

கண்களின் ஒரு நைச்சியம்.

யூனிபாரத்தில் வெளியே வந்த அதியமான், "என்ன ஞானமேரி வேலை முடிஞ்சுதா?" என்று கேட்டவாறே இருவருக்கும் நடுவில் நின்



**"எத்தனையோ கற்பனைப் பேய்க் கதை எழுதினேன். எதுவுமே பிரசுரமாகலை!"**

**"அப்புறம் என்னாச்சு?"**

**"பேயோட வாழ்ந்த கதையை எழுதின தும் பிரசுரமாயிடுத்து!"**

**— காழி. ஆர். சீதாராமன்**

றான்.

"ஆச்சுங்க ஸாரு."

ஞானமேரியை கொஞ்சம் அவன் அதிகம் நெருங்கி நிற்பதாகக் காஞ்சனா நினைத்தாள்.

"சம்பளம் வாங்க மாட்டாளாம்."

"வாங்கலேன்னா விட்டுடு" என்றான்.

அவன் தோளும் ஞானமேரியின் தோளும் சம உயரம். காஞ்சனா கவனித்தாள்.

"நான் ஹெட்கான்ஸ்டபிள் கிட்டே பேசிக் கறேன்! அவர்தானே ஞானமேரியை அனுப்பிச் சவரு."

ஞானமேரி கொஞ்சம் கூடுதல் நாணத் தோடு சிரிப்பதாகக் காஞ்சனா கருதினாள்.

அன்று இரவு கட்டிலில் காஞ்சனாவின் தலையணை விலகியிருந்தது.

அதியமானின் வேலை 'டென்ஷன்' அன்று மிகுதி.

அவனுக்கு காஞ்சனா தேவை. அவன் புதுப் பிக்கப்பட வேண்டும். மாபெரும் அளவில்.

தன் மேல் படர்ந்த கையை காஞ்சனா உதறி னாள். பல்லி விழுந்தது போல.

ஒரு சிறு இயக்கமின்மை.

காஞ்சனாவின் முகம் எதிர்ப்புறம் திரும் பியது. திரும்பிக் கொண்டே பேசினாள்.

"ஞானமேரியை நிறுத்திடலாம்!"

அவன் தாகத்தை விழுங்கினான்.

"ஏன்? நீதானே அவளை வீட்டு வேலைக்கு வச்சிக்கலாம்னு கூட சொல்லிட்டிருந்தே."

"அப்ப சொன்னேன்."

"இப்ப ஏன் திடீர்னு?"

அவள் பதிலளிக்கவில்லை.

"அவ ரொம்ப நல்லவ. சம்பளம் வாங்க மாட்டேங்கிறாளே."

அதியமான் இன்னும் புத்திசாலியாக நாளாகும். அதைத் தவிர்த்திருக்கலாம்.

அவள் பனிச்சென்று திரும்பினாள்.

"யூ லைக் கிரிமினல்ஸ்."

அவன் இன்னும் விஷயத்தைக் கிரகிக்க

வில்லை.

"என்ன சொல்றே"

"உங்களுக்குப் பெண் குற்றவாளிகளை ரொம்பப் பிடிக்கிறது!"

நெற்றியடி. அவன் மௌனமானான்.

காஞ்சனா இல்லாத, உலகின் எந்தப் பெண் நினைவும் வராத, பிரியத்தின் எதிரொலிகள் எழாத, காற்று நின்று போன ஒரு பாலைவனத்திற்கு அதியமானின் அன்றைய இரவு நாடு கடத்தப்பட்டது.

குற்றங்களோடு சம்பந்தமுள்ள தன் தொழிலை அவன் அன்று இரவு குறிப்பாக வெறுத்தான்.

ஆனால் இதிலிருந்து மீளமுடியுமா?

இல்லை. முடியாது. உடனடியாக முடியாது.

நாளை? என்றாவது ஒரு நாளை?

தெரியவில்லை.

ஆபரேஷன் முடித்து வெளியே வருகிற லேடி டாக்டர் பந்தாவோடு சமையல் அறையிலிருந்து காஞ்சனா வந்தாள்.

ஜின்னி சிரித்துக் கொண்டே அவனிடம் தாவினாள்.

அதியமானின் ஷேவிங் நுரை நீர்த்து பனியன் மீது ஒழுகியிருந்தது.

"நீங்க குளிக்கலே?"

"ஷேவிங்கே முடியலியே."

"இன்னிக்கு ஜின்னிக்கு மூணாவது தடுப்பூசி போடணும். ஞாபகம் இருக்கா."

அப்பாயிண்ட்மெண்ட் வாங்கியதே அதியமான்.

அதை நினைவூட்ட வேண்டியதில்லை.

"ஓ எஸ்."

"ஷேவ் பண்ணிட்டு சீக்கிரம் குளிங்க. ஜின்னியை வேற குளிப்பாட்டணும் இல்லே?"

"இன்னிக்கு நீ குளிப்பாட்டேன்."

"எனக்கு இன்னிக்கு ஒரு முக்கியமான கேஸ். நோட்ஸ் எடுத்து வக்கச் சொல்லி ஸீனியர் ஸ்ட்ரிக்டாகச் சொல்லியிருக்கார். குழந்தைக்கு தடுப்பூசி போட்டு நேரா அம்மா வீட்டில் விட்டுட்டு நான் ஹைக்கோர்ட் போகணும்."

அதியமான 'அப்பீல்' தோற்றதற்கு வருந்தவில்லை.

"பத்து நிமிஷம் வச்சிட்டிரு. நான் ஷேவிங் முடிச்சுடறேன்."

ஏழே முக்காலுக்குத்தான் எல்லாம் முடிந்தது.

கீழே இறங்கினர். சோதனை காத்திருந்தது. யமாஹா பஞ்சர்.

கால் ஆட்டோ ஒன்றை நிறுத்தினர்.

டிராஃபிக் ஜாமில் நீந்தி காஞ்சனாவுக்கு விசேஷமான நடந்த நர்ஸிங்ஹோமை நெருங்கும்போது ஏழு ஐம்பத்தெட்டு.

இடையில் ஒரு நாற்சந்தி. டிராஃபிக் ஸிக்னல். தாண்டிவிட முடியும் என்றுதான் ஆட்டோ சீறிப் பறந்தது.

சாலையின் வெள்ளைக் கோட்டைத் தொடும் போது சிக்னல் சிவந்து விட்டது. டிராபிக் கான்ஸ்டபிளின் விசில்.

ஆட்டோ நறுக்கென்று நின்றது.

வாகன வெள்ளம் இடை மறித்துப் பாய்ந்தது. சைக்கிள்கள். கால் நடைகள். முகங்கள். முகங்கள்.

ஞானமேரி! பார்த்து விட்டாள், சிரித்தாள். நெருங்கி வருவாள் போலிருந்தது.

அதியமான் காஞ்சனாவைப் பார்த்தான்.

அவள் ஜின்னிக்கு நாப்கின் மாற்றிக் கொண்டிருந்தாள். கவனிக்கவில்லை.

ஞானமேரியைப் பார்த்து அதியமான் வருத்தமாய்ச் சிரித்தான்.

ஒன்றன் பின் ஒன்றாக இரண்டு பைக்குகளும் அவற்றின் பின் ஒரு தள்ளு வண்டியும் ஞானமேரியை நெருங்கவிடாது தவிர்த்தன.

அவள் சாலை கடந்து பிளாட்பாரம் ஏறும் வரை அவன் பார்த்தான்.

இந்நேரத்தில் இவள் எங்கே?

ஞானமேரி பிளாட்பாரத்தில் இருந்தவாறே இன்னும் தடுக்கப்பட்டிருந்த ஆட்டோவைப் பார்த்தாள். அதியமான் கவனித்தான்.

ஜின்னியை அவன் எண்ணமாய் நேசித்தான்!

அவள் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சாலை ஓரத்திலிருந்து மாதா கோவிலுக்குப் போகும் பாதையில் திரும்பினாள்.

அவன் நிமிர்ந்து பார்த்தான்.

லூர்து மேரி ஆலயம்.

சிக்னல் விடுவித்தது.

சரியாக எட்டு ஐந்துக்கு அவர்கள் நர்ஸிங் ஹோமில் நுழைந்தனர்.

அதியமான் அப்பாயிண்ட்மெண்டைச் சொன்னான்.

"ப்ளீஸ் பீ ஸீட்" என்றாள் நர்ஸ்.

டாக்டர் அறையில் விளக்கு எரியவில்லை.

"டாக்டர் வரலியா?"

"லேட்டாவும். ஒரு சீரியஸ் ஆபரேஷன்."

அதியமான் மணி பார்த்தான்.

"ரொம்ப நேரம் ஆகுமா?"

"ஒன் அவர் ஆகலாம்."

அவன் காஞ்சனாவைப் பார்த்தான்.

"எங்க சீனியருக்கு ஒரு போன் பண்ணிட றீங்களா?" என்று சொன்னாள் அவள்.

"நானும் போன் பண்ணணும். நீ வெய்ட் பண்றியா?"

காஞ்சனா தலையசைத்தாள்.

நர்ஸிங்ஹோமை விட்டு வெளியே வந்தான். வானம் காலையிலேயே கறுத்து விட்டது.

அவன் இரண்டு ஃபோன் செய்தான்.

சில்லென்று குளிர் காற்று வீசியது.

ஒரு காப்பி குடித்தால் நன்றாயிருக்கும்.

அவன் நல்ல ஹோட்டல் தேடி நடந்தான். ஹோட்டல் வந்ததும் நுழையவில்லை. நின்றான். எதிரில் லூர்து மேரி ஆலயம்.

ஞானமேரி அங்கேதான் வேலை செய்கிறாள். அப்படித்தான் ஹெட்கான்ஸ்டபிள் சொல்லியிருந்தார்.

அவன் பர்ஸை எடுத்துப் பிரித்தான். ஆயிரம் தேறும்.

பரிசுத்தமான நேசம் ஒரு பாக்கியல்ல. அது திருப்பவே முடியாதது. வரவு செலவற்றது.

எனினும் அதை கௌரவிக்க வேண்டும்.

பக்கத்துக் கடையில் ஒரு கவர் வாங்கினான். எண்ணாமல் ஒரு கொத்து நோட்டுக்களை அள்ளி அதில் திணித்தான். பாக்கெட்டில் தனியே வைத்தான்.

ஹோட்டலில் நுழைந்து காப்பி குடித்துவிட்டு லூர்து மேரி ஆலயத்திற்குப் படியேறினான்.

வானம் மேலும் கறுத்தது. சாயங்காலம் ஆறுமணியான கறுப்பு.

லூர்து மேரி ஆலயத்தின் உள்ளே பெருக்கிக் கொண்டிருந்த ஞானமேரி விளக்குப் போட ஸ்விட்சை நோக்கிப் போனாள்.

ஷூ ஓசை கேட்டுத் திரும்பிப் பார்த்தவள் சிரித்தாள்.

அந்த அரையிருளில் ஒளி வீசிய பல்வரிசை விளக்கைப் போட்டு அவனை நெருங்கி வரும் வரை மூடவில்லை.

"ஸார் வாங்க. டிராபிக்கிலே சந்தி கடக்கும் போது பார்த்தேன். என்னை கவனிக்கல. ஆட்டோ இட்டே வரலாம்னா ரெண்டு மோட்டார் சைக்கிள்காரனுங்க பூந்து மறிச்சிட்டானுங்க."

ஞானமேரி புதுப்பானை மாதிரி பொங்கி வழிந்தாள்.

"ஜின்னி நல்லாருக்குங்களா... அம்மா நல்லாருக்காங்களா... புள்ளய மறக்கவே முடியலீங்க. வளந்துருக்கும் இல்ல. என்னை மறந்துருக்கும்."

அதியமான் அபூர்வமானதொரு சாந்தியை அனுபவித்தான்.

"ஒன்னைப் பாக்கணும்னு வந்தேன் ஞானமேரி! ஜின்னி சிசுவாயிருந்தப்ப குளிப்பாட்டினே. சிரிக்க வச்சே.... சிங்காரிச்சே."

"இன்னும் சிரிச்சுக்கிட்டே இருக்குதா ஸாரு?"

"ஆமாம். எப்பவும் சிரிப்புதான்."

எப்படித் தொடங்குவது? துணிந்தான்.

"நீ எனக்கு ஒரு உதவி செய்யணும் ஞானமேரி."





"நான்தான் முன்னாடியே சொன்னேனே, அந்த சர்ஜன் போலி ஆசாமி, அவரிடம் போக வேண் டாம்னு...!"

— பாலா

"சொல்லுங்க ஸார்."

"இதை நீ வாங்கிக்கணும்."

நீட்டிய கவரில் துருத்திக் கொண்டிருந்த நோட்டுக்களைப் பார்த்தாள். ஒரு வினாடி அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

"குடுங்க ஐயா" அவன் வாங்கினாள்.

திரும்பி விடுவிடுவென்று காணிக்கைப் பெட்டியை நோக்கி நடந்தாள். பெரிய பித்தளைப்பூட்டு அதில் மினுமினுத்தது.

துவாரத்தின் வழியே கவரைத் துருத்தித் துருத்திச் செலுத்தினாள்.

சப்தித்த சில்லறைகளின் மத்தியில் அது பொத்தென்று விழுந்தது.

திரும்பி வந்தாள். சிரித்துக் கொண்டே கை கூப்பினாள்.

"என்ன ஞானமேரி?"

"ஜின்னிக்காக வேண்டிக்கிட்டிருந்தேன். செலுத்திட்டேன்."

அதியமான் நிமிர்ந்து ஞானமேரியையும் அவள் தலைக்குப் பின்னால் குழந்தை ஏசுவை ஏந்திய லூர்து மேரியையும் மாறி மாறிப் பார்த்தான்.

"ஜின்னியைக் குளிப்பாட்ட குடுத்து வச்சிருந்ததுங்க ஸாரு. ஒவ்வொரு கொழந்தையும் ஏசுதான். கொயந்தயக் குளிப்பாட்டினா ஏசுவைக் குளிப்பாட்டறாப்பிலே."

"ஜின்னி பொண்ணாச்சே."

"பொண்ணானா என்ன? லூர்து மேரி. அவங்களுக்குள்ளற ஏசு அடைக்கலம்."

வெளியே மழை சீற்றத்தோடு தொடங்கி விட்டது. அலை அலையாக குளிர்காற்று உள்ளே பிரவேசித்தது.

காஞ்சனாவைப் பற்றி ஏதாவது சொல்வாளோ என்று அவன் எதிர்பார்த்தான்.

ஒன்றும் சொல்லவில்லை.

அதியமான் வெளியே பார்த்தான் வெக்கை தணியத்தணிய பூமியை வானம் குளிப்பாட்டிக் கொண்டிருந்தது. மண்ணுக்கு அந்த நேசம் புரிந்திருந்தது. மணம் வீசியது.



# தந்தையைத்

கேஷுவாலிடியிலிருந்து மூப்பியல் பிரிவுக்கு அந்த முதியவரை மாற்றியிருந்தார்கள். சென்ட்ரல் ரயில்வே ஸ்டேஷனில் மயக்கம் போட்டு விழுந்திருந்தார் அவர். கூட அவருக்குத் தெரிந்தவர்கள் யாருமில்லை. அவசர சிகிச்சைப் பிரிவில் சில அடிப்படை சிகிச்சைகளை செய்துவிட்டு எங்கள் பிரிவுக்கு அனுப்பியிருந்தார்கள். அப் போதுதான் அரசு பொது மருத்துவமனையில் துவங்கப்பட்டிருந்த மூப்பியல் பிரிவுக்கு நான் பொறுப்பேற்றிருந்தேன்.

உணர்வில்லாத நிலையில் வந்து சேர்ந்த அந்த முதியவரை பரிசோதித்தபோது அவருக்குக் கடும் காய்ச்சல் இருந்தது தெரிய வந்தது. நிமோனியாவாக இருக்க வாய்ப்பு உண்டு என்பதும் புரிந்தது. போதாக்குறைக்கு மார்பு மற்றும் இடுப்புப் பகுதியில் அக்கி வேறு.

இள வயதில் அக்கி என்பது மென்மையான பாதிப்பையே உண்டாக்கும். வருவதும் தெரியாது. போவதும் தெரியாது. ஆனால் முதுமைப் பருவத்தில் வரக் கூடிய அக்கி ரொம்பக் கொடுமையானது. நரம்புகளில் கடும் வலி உண்டாகும். அக்கி மறைந்த பிறகும் கூட இந்த வலியின் கடுமை தொடரும். இதைத் தாங்க முடியாமல் சில முதியவர்கள் தற்கொலை முயற்சியில்கூட ஈடுபட்டதுண்டு.

ட்ரிப்ஸ், ஆண்டிபயாடிக் இவற்றையெல்லாம் போதிய அளவில் கொடுக்க, முதியவருக்கு நினைவு வந்தது. தம்து உடல் நிலை பாதிப்புகளைப் பற்றி அறிந்ததும் அவருக்கு ஒரே வேதனை. ஆனால் அவரது பின்னணியைப் பற்றி அவர் மூலமாகவே அறிந்து கொண்ட பிறகு எனக்கு ஏற்பட்ட வேதனை அதைவிட அதிகம்.

தமிழர்தான் என்றாலும் அவர் வசித்து வந்தது டெல்லியில். நல்லதொரு பதவியில் இருந்தவர்தான். என்றாலும் அதிக சேமிப்பு இல்லாமலேயே வேலையிலிருந்து ஓய்வு பெற்றுவிட்டார். ஒரே மகன். அவனுக்குத் திருமணம் செய்து வைத்தார். சாயந்திரம் ஆனால் போதும் முதியவரை வீட்டில் தனியே விட்டு விட்டு தம்பதியர் ஹோட்டல்,

டாக்டர் வி.எஸ். நடராஜன் (மூப்பியல் நிபுணர்)



# தவிக்கவிட்ட மகன்!

பார்ட்டி என்று வெளியே கிளம்பி விடுவார்கள். மேற்கத்திய வாழ்க்கை முறையை அவர்கள் அதிகமாகக் கடைப்பிடிப்பதை முதியவர், லேசாகக் கண்டித்ததாலோ என்னவோ அவரிடம் சரியாகப் பேசுவதையே நிறுத்திக் கொண்டு விட்டான் அவர் மகன்.

நாளடைவில் அவர் மகனுக்கும் மருமகளுக்கும் பாரமாகப் பட்டார். ஒருநாள் "ராமேஸ்வரம் போகணும்னு ஆசைப்பட்டியே, அடுத்த வாரம் போகலாம்" என்று மகன் கூறியவுடன், முதியவருக்கு ஒரே ஆச்சர்யம்; ஆனந்தம்!

கிளம்பும் தினத்தன்றே உடலில் காய்ச்சல். இருந்தாலும் மகனிடம் சொல்லவில்லை;

(இதுதான் சாக்கென்று பயணத்தை நிறுத்தி விட்டால்!)

டெல்லியிலிருந்து சென்னை வந்தாகி விட்டது. தந்தையும் மகனும் 'தங்கும் அறையை' நோக்கி நடந்து கொண்டிருக்கும் போது, முதியவருக்குத் தலை சுற்றல். மயங்கிக் கீழே விழும் சமயத்தில், "இரு, காப்பி வாங்கிட்டு வரேன்" என்றபடி மகன் நகர்ந்ததுதான் அந்த முதியவர் நினைவிழப்பதற்குமுன் மனதில் பதிந்த காட்சி. கண் விழித்துப் பார்க்கும்போது பொதுமருத்துவமனையில்.

முதியவருக்கு மருத்துவச் சிகிச்சை என்பது கொஞ்சம் சிக்கலான விஷயம். மருந்துகளால் பக்க விளைவுகள் ஏற்படுவதற்கான வாய்ப்புகளும் அதிகம். எனவே மிகவும் கவனத்துடன் அவருக்கு சிகிச்சை செய்ய, சில நாட்களில் அவர் நிலை தேறியது. மனத்தளவில் ரொம்பவும் அடிப்பட்டுப் போயிருந்தார். "மணிக்கணக்காக ஸ்டேஷனில் மயக்கத்தில் கிடந்திருக்கிறேன். காப்பி வாங்கப் போகிறேன் என்று என்னைக் கைகழுவி விட்டானே" என்று புலம்பினார்.

"டாக்டர் எனக்கு உயிர் கொடுத்த தெய்வம் நீங்க!" என்று உருகிப் போனார். பாவமாக இருந்தது. உடல் நிலை தேறிய பிறகு மருத்துவமனையிலேயே வைத்திருக்க முடியாதே!

"ஏதாவது முதியோர் இல்லத்தில் சேர்க்கட்டுமா?" என்று கேட்டபோது "சொந்தப் பிள்ளை உயிருடன் இருக்கும்போது முதியோர் இல்லமா? என் கடைசி மூச்சு வரை மகனிடம்தான் இருப்பேன்!" என்றார் அழுத்தமாக.

அவரை டெல்லிக்கு அழைத்துச் செல்வதற்கான பயணத் தொகையை லயன்ஸ் கிளப் நன்கொடையாக அளித்தது. வண்டியில் ஏறி, டெல்லியில் உள்ள அவர் வீட்டுக்கு அழைத்துச் சென்றபோது, அவரது மகன், மருமகள் இருவருமே பேயறைந்ததுபோல் முகத்தை வைத்துக் கொண்டார்கள். விவரம் அறிந்ததும் "காப்பி வாங்கிட்டு வந்து தேடிப் பார்த்தா அப்பாவைக் காணோம்" என்று கூசாமல் பொய் கூறினான். (போலீஸில் புகார்கூட கொடுக்கத் தோன்றவில்லை?!)

"போயிட்டு வாங்க. இனி எப்படியாவது இங்கேயே காலத்தைத் தள்ளிடுவேன்!" என்று அவர் என்னை வழியனுப்பியபோது வேதனையாக இருந்தது.

சந்திப்பு : அருண் சரண்யா

இந்திரா சௌந்தர்ராஜன்

24

**"உரிக்க உரிக்க தோலாய்ப் போகும் வெங்காயம் போல -**
**ஒன்றுமில்லாமல் போய் விடுமோ**
**இரு ஜீவன்களின் பெருந்தன்மையும் நேசமும்?"**

அந்தக் காலை வேளையில் துளி கூட மூவரும் எதிர்பார்த்திருக்கவில்லை. மூக்கை உசுப்பிக் கொண்டு சுவரைப் பார்க்கிறான் தாமு. பாம்பே மணியத்துக்கு அவர் வருகை என்னவோ செய்கிறது. ஜவஹர் பாபுவிடம் மெலிசாய் பதற்றம் தொற்றுகிறது.

"என்ன மணியம்.. உள்ளே வான்னு கூப்பிட மாட்டியா?" அவர் குத்தலாகக் கேட்கிறாரா எதார்த்தமாகவா என்பது தெரியவில்லை.

"வாங்க...." என்கிறது மணியத்தின் அரை ஹீனம். சொல்லி வாய் மூடவும் ஒரு நிழல்!

நிமிர்ந்தால் அருகருகே பகவந்தராவும் தேசிகாச்சாரியும்! 'இதென்ன இப்படி கச்சை கட்டிக் கொண்டு வந்திருக்கிறார்கள்? சதிகளைப் பற்றி முழுவதும் தெரிந்து கொண்டு இரண்டில் ஒன்று பார்க்க வந்திருக்கிறார்களா, இல்லை...'

தேசிகாச்சாரி இமைக்க மறந்ததுபோல முறைக்கிறார். குறிப்பாக தாமுவின் மேல் வைத்த விழிகளை அவரால் அப்படி இப்படி அசைக்க முடியவில்லை.

தாமுவாலும் தேசிகாச்சாரியின் அந்த உக்ரப் பார்வையை நேருக்கு நேர் எதிர் கொள்ள முடியவில்லை. கூசிப் போகிறான்.

உள்ளே நுழைந்தபடி பகவந்தராவ் அந்த மெளனப் புழுக்கத்தைத் தம் பேச்சால் கலைக்க முனைகிறார்.

"என்ன நடந்ததுன்னு உங்களுக்கு எல்லாம் தெரியும் மணியம். ஆனா நீங்க இட்டமிட்ட மாதிரி எதுவுமே நடக்கலை. அப்படி எதுவும் நடக்கவும் நாங்கள்ளாம் விடமாட்டோம்.

"இந்த நிமிஷம் நீங்க ஏவி விட்ட வன்முறையை மோகன்ராமும் நபீஸாவும் தங்களோட பெருந்தன்மையான குணத்தால ஜீரணம் செய்திருக்காங்க. அவங்க துளி உணர்ச்சி வசப்பட்டிருந்தாலும் விஷயம் விபரீதம் ஆயிருக்



கும். நீங்க உள்ள நுழைஞ்சிருப்பீங்க. கலகமும் பிறந்திருக்கும்.

"இது எதுவுமே நடக்காம உங்களையும் விட்டு வெச்சிருக்கோம்னா அதுக்குக் காரணமும் பெருந்தன்மைதான். புரிஞ்சு திருந்துங்க. அதுதான் எல்லாருக்கும் நல்லது. திருந்தாம, திரும்பவும் அடுத்த கட்ட வன்முறைல இறங்கினா நிச்சயம் அப்ப அந்த ஆயுதத்தை ஜீரணம் செய்ய மாட்டோம்."

- பகவந்தராவின் எச்சரிக்கை மூவரையும் சற்று பயமுறுத்திய மாதிரிதான் தெரிகிறது. பேசின வேகத்தில் பகவந்தராவ் திரும்பி நடக்க ஆரம்பிக்கிறார்.

தேசிகாச்சாரியிடம் இன்னமும் இமைத் துடிப்பில்லை. முறைப்பிலும் குறைவில்லை. அப்படி ஒரு அனல் விழியாக அந்த தவசியின் விழிகள் ஆகிப் போகும் என்று கனவிலும் கூட நினைத்திருக்கமாட்டார்கள் அவர்கள்.

# ஆசை வேசல

ஒரு ஊசியை போட்டுவிட்டு நபீஸாவின் துவண்ட தோல் பரப்பைத் தேய்த்து விடுகிறார் டாக்டர். குத்தப்பட்ட இடங்களில் எல்லாம் தையல் கட்டு என்று சிகிச்சைப் பரிமாணங்கள். சுற்றிலும் ராவுத்தர் தெருவே வளைத்துக்கட்டி நின்று கொண்டிருக்கிறது.

அதில் இஸ்மாயிலை சிலர் குடைந்து கொண்டிருக்கிறார்கள்.

"இஸ்மாயில் நீ எதையோ மறைக்கிறே... என்ன ஆச்சு நபீஸாவுக்கு. யார் குத்துனது? சொல்லு..."

"நேத்து ராத்திரி அது சால்வையைப் போத்திக்கிட்டு தனியா போனப்பவே நான் சந்தேகப்பட்டேன். அப்புறம்தான் ஏதோ நடந்துருக்கு. என்ன, எதுனா அந்த பானுப் பொண்ணு சம்பந்தமான விவகாரமா?"

"சொல்லுடா... யார் செஞ்சது? சொல்லு... நாம அத்தனை பேருமா சேர்ந்து போய் இரண்டுல ஒண்ணு பாத்துட்டு வருவோம். போயும் போயும் ஒரு பெண், அதுலையும் ஒரு வயசான பெண்ணைக் குத்தி வீரத்தைக் காட்டுன அந்த பேடி யாரு... நபீஸா என்ன சொன்னிச்சு?"

அனைத்துக் கேள்விகளையும் விழுங்கிக் கொண்டு மௌனமாக நிற்கிறான் இஸ்மாயில். மனதுக்குள் தாழவை தூக்கிப் போட்டுப் புரட்டி எடுக்கும் ஆக்ரோஷம் அலையடித்தாலும் குர்ஆன் மேல் சத்தியம் வாங்கி அவனை கட்டிப் போட்டிருக்கிறானே நபீஸா!

'மூச்சு விடக் கூடாது... ஒரு 'உம்' வார்த்தை கூட இப்பொழுது ஒரு

தீக்குச்சியாகிவிடும் என்பது அந்தக் கிழவிக்கு எப்படியோ தெரிந்தும் புரிந்தும் இருக்கிறது!

'எல்லாம் காலம் கற்றுத் தந்த பாடம். காரணமே இல்லாமல் கலவரங்கள். பெயர் வைப்புக்காகச் சண்டைகள். சிலைக்காகவெல்லாம் ரத்தக் களரிகள். என்ன தேசம் இது?' என்று அவள் கலங்கிப் போன கணங்கள் பல கழிந்திருக்கிறதே?

'நினைவு தெரிந்த நாளாக நல்ல அரிசியை ரேஷனில் பார்த்ததில்லை. ஒருமுறை, ஒரே ஒருமுறை எடை குறைவில்லாமல் பொருள் வாங்கியதில்லை. மேடு பள்ளமில்லாத ஒரு சாலையில் பயணம் செய்ததில்லை. காத்திருக்காமல், வரிசையில் நிற்காமல் தண்ணீர் பிடித்ததில்லை. சாக்கடை கொசு, நாய், பன்றி என்று



"ஏகப்பட்ட சாமான்களை வைச்சு அடைச்சு ஸூட்கேஸை அழுத்தி மூட வேண்டாம்னு சொன்னா கேட்டாத் தானே!"

— சீதா தம்பி

வாழ்வதை நினைத்துச் சிந்தித்ததில்லை.

இங்கெல்லாம் வரவேண்டிய கோபம், இங்கெல்லாம் வர வேண்டிய ஒற்றுமை, இங்கெல்லாம் வரவேண்டிய எதிர்ப்புணர்ச்சி எப்படி இப்படி பெயருக்கும் சிலைக்கும் திசை மாறிச் செல்கிறது?

புரியவேயில்லை.'

அவள் சிந்தனையை கலைக்கிறது கூட்டம்.

"நபீஸா... யார் உன்னை இப்படிச் செஞ்சது சொல்லு. இப்படியே விட்டா அப்புறமா ராவுத்தருங்கன்னாலே இளப்பமாயிடும். பதிலுக்குப் பதில் கொடுத்தாத்தான் கொஞ்சமாவது புத்தி வரும்..." பெட்டிக்கடை மீரான் சாயபு நபீஸாவின் காதருகே பேசியதற்கு, கச்சிதமாகப் பதில் தருகிறாள் நபீஸா.

"நான் பதிலுக்கு பதில் கொடுத்துக்கிட்டுத் தான் இருக்கேன் மீரான்."

"என்ன உளறுறே... வீதியே கொதிச்சுக் கிடக்குது. பதிலுக்கு பதில்ங்கறது இப்படி வாயை மூடிப் படுத்துக் கிடக்கிறது கிடையாது."

"இப்ப சும்மா இருக்கறது தான்டா சரியான பதில். வேதம் படிச்சிருக்கேல்ல நீ?"

"அதப்பத்திப் பேசற நேரமில்ல இது..."

"முட்டாப் பயலே... இஸ்லாம்னா என்னடா அர்த்தம்?"

- மீரான் நபீஸாவின் கேள்வி முன் திணறல் கொள்கிறார்.

"நான் இஸ்லாத்துக்கு அர்த்தம் சொல்லிக்கிட்டிருக்கேன். நீங்கல்லாம் போய் அவங்கவங்க வேலையப் பாருங்க..." சொல்லும் போதே இன்ஸ்பெக்டரின் விஜயம் அங்கே...!

"வாங்க சார்..." என்று சேரைத் தூக்கிப் போடுகிறான் இஸ்மாயில்.

"எல்லாம் கேள்விப்பட்டுத்தான் வந்தேன். ஆமா ஏன் யாருமே கம்ப்ளையின்ட் கொடுக்க ஸ்டேஷனுக்கு வரலை?" உட்காருவதற்கு முன் அவரிடம் கேள்வி பிரதானமாக இருக்கிறது.

- இஸ்மாயில் நபீஸாவை பரிதாபமாகப் பார்க்கிறான்.

"ஏதாவது பிரச்னை இருந்தாத் தானே தம்பி கம்ப்ளையின்ட் கொடுக்க?" நபீஸாவின் படுக்கை நிலை பதிலில் ஒரு தீர்மானம். அது வந்தமர்ந்தவரை ஒரு குத்துக் குத்துகிறது. சமாளித்துக் கொண்டு பார்வையாலேயே சுற்றி இருப்பவர்களைப் பார்த்து சற்று ஒதுங்கிப் போகச் சொல்கிறார். அந்த அறையில் அவர்கள் இருவர் மட்டுமே....

"பாட்டிம்மா சும்மா தைரியமா சொல்லுங்க. உங்களை யார் குத்தினது... அந்த ஆஸ்ரமத்துக் கிழவன் தானே?" - இன்ஸ்பெக்டர் கேட்கும் விதத்திலேயே அந்த கிழவன்தான் என்று சொல்ல மாட்டாயா எனும் நப்பாசையையும் நபீஸா உணருகிறாள்.

"அப்படின்னு உங்களுக்கு யார் சொன்னது?" மெலிய கேட்கிறாள்.

"சொல்லணுமா என்ன... இப்பத்தான் அந்த ஆஸ்ரமத்துல பலான தப்புங்கல்லாம் நடக்கறதா தகவல் வருதே..."

"அப்படியா... போய் பார்த்தீங்களா?"

"இதென்ன கேள்வி பாட்டிம்மா. இப்பத் தானே தகவல் வர ஆரம்பிச்சிருக்கு. இனி போய்ப் பாத்து பிடிக்காம விடுவோமா என்ன.. வரவர சாமியாருங்கன்னாலே பயமால்ல இருக்கு?"

நபீஸா ஏதும் பேசாமல் தலையை தாழ்த்திக்

கொள்கிறாள்.

"இப்படி சும்மா இருந்தா எப்படி? அந்த கிழவன்தா உங்களைக் குத்தி இருக்கணும். நான் கம்ப்ளையிண்ட் ரெடி பண்றேன். ஒரு கையெழுத்து மட்டும் போடுங்க. மத்ததை நான் பாத்துக்கறேன்."

தாழ்ந்திருக்கும் நபீஸாவின் சிரம் இப்பொழுது மெல்ல நிமிருகிறது. பூஞ்சை விழிகளில் கண்ணீர் திரண்டிருக்கிறது.

"எதுக்கு அழுவறீங்க?"

- பதில் சொல்லாமல் நபீஸா அருகில் மோடா ஒன்றின் மேல் கிடக்கும் குர்ஆன் புத்தகத்தை நடுங்கும் கரங்களால் எடுக்கிறாள். இன்ஸ்பெக்டருக்கு அந்தச் செய்கை என்னவோ செய்கிறது. குர்ஆனுக்குள் ஒரு ஸ்படிக மணி மாலை! கைகளால் அந்த மாலையை எடுத்துக் கொண்டு ஜபிக்கத் தொடங்குகிறாள்.

"பாட்டிம்மா... என்ன இது? கேட்டதுக்குப் பதில் சொல்லாம இப்படி ஜபம் பண்ணிக்கிட்டு..."

"தயவு செய்து எழுந்திருச்சு வெளிய போயிடுங்க தம்பி. நான் சுத்த பத்தமா ஜபம் பண்றவ. அஞ்சு தொழுகை விடாதவ. இந்த கத்திக் குத்து காயத்துல கூட அதை நான் விடலைன்னா பாத்துக்குங்களேன்."

"சரி அதுக்கென்ன இப்போ... நான் உங்க நல்லதுக்குத்தானே வந்துருக்கேன்."

"போதும் தம்பி.. எனக்கு எழுவது வயசாகுது. கேபிள் டீவில தினம் பத்துப் படம் ஓடுது. ஒண்ணு இரண்டாது பாக்கும்படி ஆயிடுது. வாரப் புத்தகம் பேப்பர்னும் இஸ்மாயில் நிறைய வாங்கறான். அதையும் புரட்டிப் பாக்கறவ நான். நல்லது கெட்டது எதுன்னு எனக்கு நல்லா தெரியும்..." - ஆவேசிக்கிறாள்.

"நானறிய நாற்பது வருஷமா இங்க கள்ளச் சாராயம் விக்கறாங்க. அதைத் தடுக்க போலீஸ் வந்து பாக்கலை. நானறிய எவ்வனவோ திருட்டு. புகார் கொடுத்தும் ஒரு பலனுமில்லை. இப்ப என்னடான்னா கம்ப்ளையிண்ட் கொடுக்காமலே வந்துருக்கீங்க. அந்த ஆசிரமத்து சாமியார்தானே குத்தவாளின்னு நீங்களே தீர்மானம் பண்ணி கேக்கறீங்க. வாஸ்தவத்துல அந்த மகராசன் என்னைக் காப்பாதினவர். யாரோட காசு பணத்துக்காக நீங்க இப்படிப் பறக்கறீங்கன்னு எனக்குத் தெரியலை. ஆனா ஒண்ணு மட்டும் நல்லா தெரியும்.

"நீங்க சமூகத்தைக் காப்பாத்தறவர் இல்லை. நியாயம் பக்கம் நிக்கறவர் இல்லை. நான் வயிறு எரிஞ்சு உங்களப் பார்த்து நல்லா இருக்க மாட்டேன்னு சொன்னா அது பலிச்சுடும். அதனால தான் சொன்னேன் நான் ஜபிக்கறவ தொழுறவன்னு...

"ஐயா உன்னை கெஞ்சிக் கேட்டுக்கறேன். நல்லதுக்குத் துணை செய்யாட்டியும் கெடுதல் பண்ணாம இருய்யா...."

- நபீஸா பிடித்த பிடியில் இன்ஸ் பெக்டரிடம் ஸ்தம்பிப்பு. பதில் எகிறலையோ, கோபத்தையோ துளி கூட காட்ட முடியவில்லை.

இதய மையத்தைக் குறிவைத்து நபீஸா கொட்டிய வார்த்தைகளின் சக்தியில் அங்கெல்லாம் இப்பொழுது வலி.

## குன்றைக் கரைத்த கிழவர்!



தசரத் தாஸ், குன்றின் அடிவாரத்தில் நிலத்தில் பாடுபட்டு வந்தார். குன்றைக் கடந்து அந்தப் பக்கம் செல்ல ஒரு குறுகலான, ஆபத்தான கணவாய் இருந்தது. அதன் வழியே அவர் மனைவி ஒரு நாள் சென்று பலத்த காயம்பட்டுக் கொண்டார். அதனால் கலங்கிப் போன தசரத்தாஸ், அந்தக் குறுகலான கணவாயை அகன்ற பாதையாக்கத் தீர்மானித்தார். உளியும் சுத்தியும் எடுத்துப் போய் குன்றைப் பெயர்க்க ஆரம்பித்தார். அது ஒரு வெறியாக வளர்ந்தது. கிராம மக்கள் அவரைப் பைத்தியக்காரன் என்றனர். தசரத்தாஸ் இதனால் உசுப்பி விடப்பட்டு மேலும் தீவிரமாகப் பாடுபட்டார். நாளடைவில் அந்தக் குன்றையே கரைத்து விட்டார்! 25 வருஷங்கள் இதற்கு ஆயின! ஐம்பது கிலோ மீட்டரில் இருந்த பக்கத்து கிராமம் இப்போது எட்டு கி.மீ. தூரத்தில் இருந்தது. வாகனப் போக்குவரத்து தொடங்கியது. கிராம மக்கள் மகிழ்ந்தனர். ஆனால் அதைக் காண தசரத்தாஸின் மனைவி பகுனி தேவிதான் இல்லை. கணவனின் சாதனை பூர்த்தியாவதற்குச் சில காலம் முன்பாகவே அவர் காலமாகி விட்டார்.

ஆதாரம் : இந்தியன் எக்ஸ்பிரஸ்
தகவல் : த.வி. கிருஷ்ணமூர்த்தி

மௌனமாக எழுந்து கதவைத் திறந்து கொண்டு நடக்க ஆரம்பிக்கிறார்.

நெகிழ்ச்சியின் உச்சம் என்று ஒன்றிருந்தால் அதில் இருப்பதாகத் தன்னைக் கருதிக் கொள்கிறான் மோகன் ராம். காரணம் நபீஸா! பெரிய ஆஸ்பத் திரியில் அட்மிட் ஆகி அவள் கிடப்பதிலிருந்து இன்ஸ்பெக்டரிடம் பேசியது வரை எல்லாமே இப்பொழுது அவனுக்குச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஒரு கூடை ஆப்பிள் ஆரஞ்சுடன் இஸ்மாயில் அந்தச் செய்தியையும் சுமந்து கொண்டு வந்து மோகன் ராமின் நலனை விசாரித்து விட்டு முன்னால் நின்று கொண்டிருக்கிறான்.

**ஐரோப்பிய நாகரிகம்!**



**சுவர்களுக்கு என்ன வண்ணம் கொடுத்தால் நன்றாயிருக்கும் என்று யோசித்தது அந்தக் காலம். ஐரோப்பிய நாடுகளில், சுவர்களில் வித விதமான ஓவியங்களைத் தீட்டி வைப்பதே இப்போதைய நாகரிகமாக இருக்கிறது.**

**— பாரிஸ். பார்த்தசாரதி**

"என்னை விசாரிக்கறதுல பாட்டி முந்திக் கிட்டாங்க. நான் எப்படி நன்றி சொல்வேன்..." தேம்புகிறான்.

"அழாத மோகன்... தையல் பிரிஞ்சிட வாய்ப்பிருக்கு..." அருகில் இருந்து எச்சரிக் கிறான் முகுந்தன்.

"முகுந்தா, பாத்தியா பாட்டியோட செய் கையை... ஒரு பெரிய கலவரத்தையே தன் பெருந்தன்மையால தடுத்து நிறுத்தியிருக்காங்க."

"நீயும்தானே... இப்ப நீ கையசைச்சா கூட போதுமே அந்த தாமுவை, ஜவஹர் பாபுவை. இரண்டுல ஒண்ணு பாத்துட மாட்டோம்."

"முகுந்தா இன்னுமா உன்னை இந்த பழி உணர்ச்சி விடலை. நான் கோடுதான் போட் டேன். பாட்டி ரோடே போட்ருக்காங்க. இதை எல்லாம் பாத்துமா இப்படி பேசறே...?"

"அப்படின்னா அந்தப் பசங்க இந்நேரம் திருந்தியிருப்பாங்கன்னு நினைக்கறியா நீ! திருந்தறவங்களா அவங்க... அவங்களும் திருந்தப் போறதில்லை; நம்ம ஜனங்களும் திருந்தப் போறதில்லை.

இப்ப இருக்கற இந்த நெகிழ்ச்சிக் கோபம், ஒத்துமை உணர்ச்சி இதுக்கு எல்லாம் ஆயுள் நாலு நாள்தான்!

"ஆமாம் மோகன் ராம்.... நாலு நாள் தான் இதுக்கெல்லாம் ஆயுள். அஞ்சாவது நாள் அவன் திரும்ப சாராயம் விப்பான். ஜனங்களும் ஒளிஞ்சு போய்க் குடிப்பாங்க. இதை எல்லாம் மறந்துடுவாங்க. பானு மாதிரி பெண்களுக்கு வலை விரிப்புகளும் தொடரும்.

"அந்த கூட்டத்தை விட்டு வைக்கறது கொஞ்சம் கூட நல்ல முடிவாப்படலை. நீ, உன் பாட்டி உங்க பெருந்தன்மை எல்லாம் வீண் போகப் போகுது. எழுதிக்க - இந்த சமூகத்தைத் திருத்தவே முடியாதுன்னு நீ சொல்லப் போறே..."

இஸ்மாயில் முகுந்தனின் கருத்தோடு இணைந்து பேசுகிறான். நெகிழ்ச்சியை மீறி இப் போது வலிக்கிறது மோகன் ராமுக்கு. இவர்கள் சொல்கிற மாதிரி ஆகிவிடுமா என்கிற பயம் மெல்ல மனக்கூட்டில் தன் குஞ்சுகளைப் பொறிக்க ஆரம்பிக்கிறது. நல்ல வேளை... இதம் தருவது போல தேசிகாச்சாரி அங்கு அவர்கள் நடுவில் நுழைந்திருந்தார்.

"என்னப்பா ரொம்பக் கலக்கமா இருக்கே! வயசுக்கு மீறின பெருந்தன்மை காட்டுன மனகல கலக்கமா? எங்க உன் பெருந்தன்மைக் கும் பொறுமைக்கும் மதிப்பில்லாம போயிடு மோன்னு பயப்படறியா? நல்ல விஷயங்களுக் கெல்லாம் ஆயுள் நாலு நாள் தானாங்கறது தானே உன் பயம்?"

படுத்திருக்கும் நிலையில் மோகன்ராமின் சிரம் விடையை எதிர் நோக்கி அசைகிறது. இஸ்மாயிலுக்கு தேசிகாச்சாரியின் அந்த மனதை படிக்கும் சாதுர்யம் வியப்பை பெருக்கு கிறது.

ஆனால் பதில் ஒரு அஸ்திரம் போல் நிற்கப் போவது அவர்களுக்கு தெரியாது.

(தொடரும்)

# கல்கத்தாவில் இனி கிரிக்கெட் மாட்ச் நடக்காதா?

ஒரு நாள் கிரிக்கெட் போட்டியானாலும் சரி, ஐந்து நாள் மாட்ச் ஆனாலும் சரி, இனி கல்கத்தாவில் நடக்குமா? ஆண்டாண்டு காலமாய் ஈடன் தோட்டத்தில் கிரிக்கெட் மாட்ச் பார்த்து வரும் கல்கத்தா கிரிக்கெட் ரசிகர் மத்தியில் பரபரப்பாகப் பேசப்படும் விஷயம் இதுதான்.

ஏன் இந்த திடீர்க் கேள்வி?

அண்மையில், சுதந்தர பொன் விழாவையொட்டி நடந்த கிரிக்கெட் போட்டியின் இறுதிப்போட்டி கல்கத்தாவில் நடந்ததில்லையா! அதற்கான பாதுகாப்பு ஏற்பாடுகளை மேற்கு வங்காள கிரிக்கெட் அசோசியேஷன் செய்தது. மாநில போலீசைச் சேர்ந்த அதிகாரிகள் உட்பட 5000 பேர் அன்றைய தினம் பாதுகாப்புப் பணிகளில் ஈடுபடுத்தப்பட்டனர்.

பாதுகாப்புக்காக போலீசாரை அனுப்ப வேண்டும் என்று, மே. வங்க கிரிக்கெட் கழகம் மாநில அரசைக் கேட்ட போதே, அதற்குரிய கட்டணம்



செலுத்தப்பட வேண்டும் என்று அரசு நிபந்தனை விதித்தது.

ஆனால், கிரிக்கெட் கழகம் சார்பில் கேளிக்கை வரி விதிக்கப்படாமல் மாட்ச் நடக்கிறது. அதுபோலவே போலீஸ் பாதுகாப்பும் இலவசமாக ஏற்பாடு செய்து தரப்பட வேண்டும் என்று கோரப்பட்டது. அதை ஒப்புக் கொள்ளாமல் பாதுகாப்புப் பணியில் ஈடுபடுத்தப்படும் போலீஸாரின் ஒரு நாள் ஊதியத்தை அரசுக்குச் செலுத்தியே ஆக வேண்டும் என்று அரசாங்கம் கூறிவிட்டது.

மாட்ச் தினத்துக்கு முன்பாகவே, பாதுகாப்பு ஏற்பாடுகளுக்கான கட்டணமாக 11 லட்சத்து 37 ஆயிரம் ரூபாய் கட்டப்பட்டிருக்க வேண்டும். ஆனால், மே. வங்க கிரிக்கெட் கழகம் அப்படிச் செய்யவில்லை. ஆனாலும், போலீஸ் பாதுகாப்பு வழங்கப்பட்டது.

இப்போது மாட்ச் முடிந்து சுமார் ஒரு மாதம் முடிந்து விட்ட சூழ்நிலையிலும், அந்தப் பணம் இன்னும் அரசாங்கத்துக்குச் செலுத்தப்படவில்லை!

'ஒருநாள் மாட்சுக்குச் சுமார் பதினொன்றரை லட்சம் என்றால், ஐந்து நாள் மாட்சுக்கு சுமார் அறுபது லட்சம் ஆகிறது. இது ரொம்ப அதிகம். இவ்வளவு பணம் கட்ட மாநில கிரிக்கெட் கழகங்களுக்கு வசதி இல்லை. பணம் கட்ட வேண்டும் என்று கட்டாயப்படுத்தினால், இனி வரும் மாட்சுகளில், டிக்கெட்டுகளின் விலையைத்தான் அதிகரிக்க வேண்டியிருக்கும். அதனால் கிரிக்கெட் ரசிகர்களுக்குத்தான் கஷ்டம்!' என்கிறார்கள் கிரிக்கெட் கழகத்தினர்.

'கிரிக்கெட் ஆட்டத்தில் கமர்ஷியலாகச் செயல்பட்டு, எவ்வளவு சம்பாதிக்கிறார்கள்! அரசு, எதற்கு இலவசமாகப் பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்து தரவேண்டும்' என்பது எதிர்த் தரப்பு வாதம்!

மாநில உள்துறைச் செயலாளர், மாநில அரசின் ரிசர்வ் வங்கிக் கணக்கில், பணத்தை உடனடியாகக் கட்டும்படி, கிரிக்கெட் கழகத்துக்கு எழுதியுள்ளார். "எப்படியும் பணம் கட்டப்பட்டுவிடும்!" என்கிறார் நம்பிக்கையுடன்.

விஷயம், ஒருநாள் மாட்ச் போல சட்டென்று முடிவுக்கு வருமா? ஐந்து நாள் மாட்ச் போல இழுத்துக் கொண்டே போகுமா தெரியவில்லை!

— பாரதி

## கும்பாபிஷேகங்கள், திருவிழாக்கள், பெரிய மாநாடுகள் ஆகியவை நடக்கும்போது, என்னென்ன முன்னேற்பாடுகளைச் செய்தால் தீ விபத்துகளைத் தவிர்க்கலாம் என்று தீயணைப்புத் துறை இயக்குனர் வி. ஜெயபெருமாளிடம் கேட்டோம்...

இது போன்ற தீ விபத்துக்களின்போது மக்கள் எப்படி நடந்து கொள்கிறார்கள் என்ற விஷயம் மிகவும் முக்கியமானது. நம் வீட்டில் உள்ள குழந்தை ஏதாவது ஆபத்து என்றால் கட்டிலுக்கு அடியிலோ அல்லது பீரோவுக்கு பின்னாலோதான் ஒளிந்து கொள்ளும். ஆனால், பெரியவர்கள் கதவு வழியாக வெளியே ஓடித் தப்பித்து விடுவார்கள். அவரவரின் வயது, அறிவு என்று அதற்கேற்றபடி நடந்து கொள்கிறார்கள். 'தான் தப்பித்தால் போதும்' என்று ஒவ்வொருவரும், நெருக்கடியான வழிகளில் தப்பிக்க நினைக்கும்போது, நெரிசல் ஏற்படுகிறது. தவறிக் கீழே விழுபவர்களின் மேல் மற்றவர்கள் மிதித்துக்கொண்டு ஓட, விழுந்தவர்கள் மூச்சுத் திணறி இறக்கிறார்கள்!

தஞ்சை தீ விபத்தில்கூட தீக் காயங்களில் இறந்து போனவர்கள் சொற்பமானவர்கள்தான். நெரிசலில் மிதிபட்டு இறந்தவர்கள்தான் அதிகம். ஆகவே மக்கள் அதிக அளவில் கூடும் இடங்களில் விபத்துக்கள் ஏற்பட்டால், பதற்றப் படாமல், எப்படி தப்பித்துச் செல்ல வேண்டும் என்று ஸ்பீக்கரில் அறிவித்துக் கொண்டே இருக்க வேண்டும். அவசர வழி எங்கு இருக்கிறது என்றும் சொல்ல வேண்டும். 'ஒன்றும் நடக்காது' என்ற மனோபாவத்தில் எந்த இடத்திலும் செயல்படுவது தவறு. விபத்து ஏற்பட எல்லா வாய்ப்பும் இருக்கிறது என்ற ரீதியில் தான் நடந்து கொள்ள வேண்டும்.

தென்னங்கீற்றுகள், உள்ளுக்குள் துணி வேலையுடன்கூடிய பந்தல் ஆகியவற்றில் சீக்கிரம் தீப்பிடிக்கக்கூடிய வாய்ப்பு உண்டு. நன்கு காய்ந்த தென்னங்கீற்றுப் பந்தல், ஒன்றரை நிமிடத்தில் மூன்றடி சுற்றளவுக்கு எரிந்துவிடும். ஆகவே முதலில் பந்தலைக் குறைந்தது பதினைந்தடி உயரத்தில் போட வேண்டும். முடிந்தால் தென்னங்கீற்றுகளுக்குப் பதில் தகரத்தையோ அல்லது லைட் ரூஃபிங் ஷீட்டையோ உபயோகிக்க வேண்டும். கூரையைத் தாங்கக்கூடிய கம்புகளும், கம்பங்களும் மிக உறுதியாக இருக்கிறதா என்று பார்க்க வேண்டும். இல்லையேல் பலமான காற்றில்கூட கூரை தரையிறங்கி விழும் ஆபத்து இருக்கிறது.

கும்பாபிஷேகம் போன்ற நிகழ்ச்சிகளின் போது யாக குண்டங்களின் அருகில், கையடக்கமான தீ அணைப்புச் சாதனங்களை வைத்துக் கொண்டிருக்கும் ஆட்களை



நிறுத்தி வைக்க வேண்டும். நம் வீட்டில் சிறு ஹோமம் வளர்த்துச் செய்யும் நிகழ்ச்சிகளில்கூட பார்த்தீர்கள் என்றால் பக்கத்தில் மாவிலை செருகப்பட்ட செம்பில் தண்ணீர் வைத்திருக்கிறார்கள். இதற்கு சாஸ்திரங்களின் அடிப்படையில் வேறு காரணங்கள் இருந்தாலும் நெருப்பு பக்கத்தில் முன்ஜாக்கிரதை உணர்வோடு தண்ணீர் வைக்கப்பட்டிருக்கிறது என்றும் சொல்லலாம்!

கும்பாபிஷேகம் போன்ற நிகழ்ச்சிகளிலும், எவ்வளவு மக்கள் வருவார்கள், அவர்கள் எங்கே உட்காருவார்கள், எப்படி வெளியேறுவார்கள் என்பதெல்லாம் முன்கூட்டியே யோசித்துப் பார்க்க வேண்டும். அந்த அடிப்படையில் வெளியேறும் வழிகள் வைக்கப்பட வேண்டும். கூடிய மட்டில் பந்தலின் இரு

# தீ விபத்துகளைத் தடுக்க என்ன செய்யலாம்?

புறமும் பரந்த இடைவெளி இருப்பது மிகவும் நல்லது. சில இடங்களில் தீ விபத்து ஏற்பட்டால் பயன்படுத்த மணல் நிரப்பிய வாளிகளை வைத்திருப்பார்கள். ஆனால், நம் மக்கள் அதில் வெற்றிலைச் சாறை துப்பி அசிங்கப்படுத்தி வைத்திருப்பார்கள். சிலர், 'ஸார்... உங்க வண்டியை கொஞ்சம் தூர நிறுத்திக்கங்க' என்று தீ யணைப்பு அதிகாரிகளிடம் ஏதோ அலர்ஜி போலச் சொல்கிறார்கள். மின்சார மெயின் ஸ்விட்சுகளை பந்தலுக்கு வெளியில் சிறிது தூரத்தில்தான் வைக்க வேண்டும். அப்போதுதான் மின் கோளாறினால் நெருப்புப் பொறி வந்தால்கூட பந்தலுக்கு ஒன்றும் ஆகாது. அதுபோல, பந்தலுக்குள் செல்லும் மின் கம்பிகள் பாதுகாப்பான குழாய்களில் எடுத்துச் செல்லப்பட வேண்டும்.

வாண வேடிக்கைகளை வெகு தொலைவில்தான் நடத்த வேண்டும். ஒரு குறிப்பிட்ட நேரத்தைத் சொல்லி, அப்போது நடத்தினால், பந்தலை கண்காணிக்க வசதியாக இருக்கும். 'எதுவும் நடக்காது; ஒருநாள் நிகழ்ச்சிதானே' என்று செலவுக்குப் பயந்தோ அல்லது அலட்சியமாகவோ இருக்கும்போது விபத்துக்களுக்கான வாய்ப்புகள் அதிகமாகின்றன.

**மா**நாடுகள் போன்ற நிகழ்ச்சிகளின் போது, மக்கள் அமரும் இடங்கள் தனித் தனிப் பெட்டிகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு பெட்டிக்கும் தனித்தனி வழிகள் வைக்க வேண்டும். சமைக்கும் இடங்களுக்கு தகரக் கொட்டகைதான் பாதுகாப்பானது. ஏதாவது தீ விபத்து என்றால், தீயணைப்பு வண்டிகள் சுற்றி வந்து செயல்பட வழிகள் இருக்கிறதா என்பதைப் பார்த்துக் கொள்ள வேண்டும். ஓலைக் கொட்டகைகள், முகப்புகள் ஆகியவற்றை ஒட்டியவாறு சீரியல் லைட் அலங்காரம் தவிர்க்கப்பட வேண்டும்.

ஒவ்வொரு விபத்தின்போதும் பல பாடங்களைக் கற்றுக் கொள்கிறோம். தூத்துக்குடி அருகே சினிமா (ஓலை) கொட்டகை பற்றிக் கொண்ட பிறகுதான், இனி ஓலை சினிமாக் கொட்டகைக்கு அனுமதி கிடையாது என்ற முடிவெடுக்கப்பட்டது. அதேபோல் சென்னை, மதுரை பொருட்காட்சிகளில் தீ விபத்துகள் ஏற்பட்ட பிறகு, பொருட்காட்சி ஸ்டால்கள் தகரத்தில்தான் அமைக்கப்பட வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. எல்.ஐ.சியில் தீ விபத்து ஏற்பட்ட பிறகு, பல மாடிக் கட்டடங்களைத் தீ விபத்துகளில் இருந்து பாதுகாக்க பல வழிமுறைகள் வகுக்கப்பட்டன.

**த**ஞ்சாவூரைப் பொறுத்த மட்டில் விபத்து ஏற்பட்ட போது அங்கு நிறுத்தி வைக்கப்பட்டிருந்த மூன்று தீ அணைப்பு வண்டிகளிலும் தண்ணீர் இருந்தது. அவர்கள் விரைந்து செயல்பட்டார்கள் என்பது கொட்டகையைத் தாங்கி நின்ற கம்பங்கள் எரியாமலிருப்பதில் இருந்து தெரிகிறது. தீ அணைப்பு வேலையைத் தவிர கம்பித் தடுப்புகளை அகற்றி, மக்களைக் காப்பாற்றும் பணியிலும் அவர்கள் ஈடுபட்டதால்தான் உயிர்ச்சேதத்தை இந்த அளவுக்காவது குறைக்க முடிந்தது.

கும்பாபிஷேகம் போன்ற நிகழ்ச்சிகளில் இது போன்ற விபத்துகள் ஏற்படாமலிருக்க என்ன செய்ய வேண்டும் என்ற வழிமுறைகள், விதிகள் இனி வகுக்கப்படலாம். எல்லாவற்றிலும் முக்கியமானது என்னவென்றால் எந்த விதமான அலட்சியத்துக்கும் இடம் கொடுக்காமல் வகுக்கப்படும் வழிமுறைகளைக் கண்டிப்பாக அமுல் நடத்த வேண்டும். இதில் மெத்தனம் கூடாது.

சந்திப்பு : **ஸ்ரீனிவாசன்**

● அவ்வை கே. சஞ்சீவி பாரதி, கலிங்கியம்.
? மக்களின் எதிர்பார்ப்புக்குத் தகுந்தபடி தி.மு.க. அரசு செயல்படவில்லை என்கிறாரே சோ. பாலகிருஷ்ணன்?
! எதிர்க்கட்சியாகச் செயல்பட்டு இப்படி கௌரவமாகப் பேசி நிறுத்திக் கொண்டால் எவ்வளவோ நன்றாயிருக்கும். 'சகுனி', 'கூனி' என்றெல்லாம் ஆரம்பித்தால்... தி.மு.க. பேச்சாளர்களில், அநாகரிகத்தின் அதலபாதாளத்துக்குப் போகக் கூடியவர்கள் இருக்கிறார்கள். அப்புறம் எத்தனை கருணாநிதி - மூப்பனார் வந்தாலும் நலிந்த நல்லுறவை 'ரிப்பேர்' செய்ய முடியாமல் போகும். இரு யானைகளும் தம் தலையில் தாமே மண்ணை அள்ளிப் போட்டுக் கொண்டதாகிவிடும்.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.
? 'எதற்கும் தகுதியில்லாத 'ஜெ'வை எதிர்க்க வேண்டியிருக்கிறதே...!' என்று எஸ்.டி.எஸ். வேதனைப்பட்டுள்ளாரே...?
! அட்லீஸ்ட், தொங்கு பயணமாவது தவிர்க்கப்பட்டுள்ளதே என்று சந்தோஷப்படத் தெரிகிறதா பாருங்கள்...!

● கே. ராஜா திருவேங்கடம், காப்பரத் தாம்பட்டி.
? பந்த் எப்படி...?
! பிசு பிசு...

● ஏ. சுகுமார், காட்டுக்கானூர்.
? ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு இலங்கை கிரிக்கெட் அணியின் நிலைமை எப்படியிருக்குமோ... என்பது குறித்து ரணதுங்க வருத்தப்பட்டிருக்கிறாரே...?
! அதனால்தாங்க ஸ்ரீலங்கா கிரிக்கெட் அணி உருப்படுகிறது!


• நாடகம்!


• ஒப்புதல் வாக்குமூலம்


• என்ன செய்வார்...?

● எல்.எம். மகாநந்தினி, திருவண்ணாமலை.
? செயின்ட் கிட்ஸ் மோசடி வழக்கில் நரசிம்மராவ் குற்றமற்றவராகிவிட்டாரே...?
! வலுவான சாட்சியம் அல்லது ஆதாரம் இல்லாதபோது நீதி மன்றங்கள் தண்டனை வழங்க இயலாது. சி.பி.ஐ. வழக்குத் தயாரித்ததில் குற்றமிருக்கிறது. அடுத்தடுத்து வரும் அரசியல் தலைமைக்குக் கட்டுப்பட்டு அவர்கள் விருப்பத்துக்குப் பணிந்து செயல்படுவதால் பல கோளாறுகள். 'நான் எதைச் செய்தேனோ அதை ராஜீவ் காந்தி ஆணையின் பேரில்தான் செய்தேன்...!' என்று நரசிம்மராவ் கூறியிருப்பதே ஒப்புதல் வாக்குமூலம்தான்!




• ஐந்து வருடக் [illegible]


• மகிழ வேண்டாமோ...

# மீண்டும் ஜெ. - சசி இணைந்தது பற்றி..?

● எஸ்.வி. பார்த்தசாரதி, திருச்சி - 20
? கும்பகோணம் மகாமகம், தஞ்சாவூர் பெரிய கோயில் கும்பாபிஷேகம் - ஒப்பிடுக?
! அது விபரீதம்; இது விபத்து.

● அ. கிருஷ்ணகுமார், பு. புளியம்பட்டி.
? 'இந்தியாவில் ஒலிம்பிக் போட்டியை நடத்தும் நாள் வெகு தொலைவில் இல்லை...'

*என்று ஜனாதிபதி சர்மா கூறியிருக்கிறாரே...?*
! ஜனாதிபதி பதவிக்கு நடக்கும் அரசியல் ஒலிம்பிக் சதுரங்கப் போட்டிகளில் காய்களை சாமர்த்தியமாக நகர்த்திக் கொண்டிருக்கிறார் சர்மா! 'சுதந்தரப் பொன் விழா ஆண்டு என்பதால், சுதந்தரப் போராட்டத்தில் ஈடுபட்ட ஒருவரே ஜனாதிபதியாக இருக்க வேண்டும்' என்று ஓர் அறிக்கை. இரண்டாவது தடவையாக ஜனாதிபதி பதவியில் நீடிப்பதில் தமக்கு ஆட்சேபணை இல்லை' என்று சமயம் பார்த்து நாசூக்காக வெளிப்படுத்தி...

● **என். சங்கரதாஸ், ஸ்ரீவில்லிப்புத்தூர்.**
*? கலவரத்தின் போது துப்பாக்கிச் சூடு நடந்ததில் இறந்தவர்களின் குடும்பத்துக்கு அரசு உதவித் தொகை கொடுக்கிறதே... அப்படியானால் துப்பாக்கிச் சூடு நடத்தியது தவறு என்றுதானே அர்த்தம்?*
! முன்னது சட்ட - ஒழுங்கு பிரச்னை. அது கட்டுமீறும் போது அடக்குவது அரசின் கடமை. பின்னது மனிதாபிமானம்.

● **ஆர். ராஜதுரை, சீர்காழி.**
*? சசிகலா மீண்டும் ஜெயலலிதாவுடன் இணைந்தது அ.தி.மு.க.வுக்கு லாபமா? நஷ்டமா?*
! கஷ்டம்!

● **எஸ். நாகராஜன், மேலப்பாதி** ❑
*? இன்றைய அரசியல் தலைவர்கள் தங்களுக்குப் பின்னால் அடுத்த தலைவரை மக்களுக்கு அறிமுகப்படுத்துவதில்லையே....?*
! அப்படி அறிமுகப்படுத்தப் போக, அந்த இளைய தலைவர்கள் தங்களுக்கு முன்பாகவே வந்து தலைமையைப் பறித்துக் கொண்டுவிடுவார்களோ என்கிற பயம்தான்... வேறென்ன...?

● **மு. இரவிச்சந்திரன், சேலம் - 9.**
*? கன்னியாகுமரி எக்ஸ்பிரஸாயிருந்த அ.தி.மு.க, இனி சென்னை கோட்டையைப் பிடிப்பதோடு மட்டுமல்லாமல், டில்லி வரை செல்லும் ஜி.டி. எக்ஸ்பிரஸாகவும் மாறும் என்கிறாரே ஜெயலலிதா?*
! வழியில் எத்தனை விபத்துகளோ...!

● **கே.ஆர். உதயகுமார், சென்னை - 1.**
*? தன்னம்பிக்கை - தெய்வ நம்பிக்கை இரண்டில் எதற்கு முதலிடம் தரலாம்...?*
! இரண்டும் வெவ்வேறு அல்ல. ஒன்றையொன்று சார்ந்தவைதான்.

● **ஜெ. கண்ணன், சென்னை - 101.**
*? 'கிரிக்கெட் போட்டிக்காக தமிழக அரசு விடுமுறை அறிவிக்கிறது. ஆனால் இலங்கைத் தமிழர்கள் ஆதரவு 'பந்த்' என்றால், அதில் கலந்து கொள்ள மறுக்கிறது.. இலங்கைத் தமிழர்களின் உயிர், கிரிக்கெட் போட்டிகளைவிட கேவலமாகி விட்டதா...?' தி.க. வீரமணி இவ்வாறு கேள்வி எழுப்பியிருக்கிறாரே?*
! 'பந்த்' என்பதற்கும் விடுமுறைக்கும் இடையே மலைக்கும் மடுவுக்குமான வித்தியாசம் உண்டு. இது வீரமணிக்குத் தெரியாதென்பதில்லை. எப்படியோ கலைஞருக்குக் கிடுக்கிப்பிடி போட வேண்டும் என்பதில் மட்டுமே அவர் குறியாய் இருப்பதால் இப்படி அவர் பேசுவதில் ஆச்சரியமில்லை. கவனம் அவர் பேரில் திரும்புகிறதல்லவா!


• லாபமா...?

● **ஏ.எஸ். இரமசாமி, நீலாம்பூர்.**
*? எங்கள் கிராமங்களில் ஒரு லிட்டர் பால் - பசும்பால் - ரூ. 6.50 க்குக் கிடைக்கும். ஆனால் ஒரு பாட்டில் தண்ணீர் (மினரல் வாட்டர்) விலை ரூபாய் 15/- இது எப்படி இருக்கு...?*
! வெண்மைப் புரட்சி போல், பசுமைப் புரட்சி போல்... ஒரு குடிநீர் புரட்சி வந்தால் தேவலை.


• ....நஷ்டமா...?


முங்கிதுமின்றி...

● **தேனம்மாள் ராமசாமி, திருவில்லிப்புத்தூர்.**
*? ஜெயலலிதாவும் சசிகலாவும் இணைந்திருப்பதால் நெடுஞ்செழியன் அரசியலுக்கு முழுக்குப் போடுவாரா?*
! உதிர்ந்த ரோமம் திரும்பப் போய் ஒட்டிக் கொண்ட போதே மனச்சாட்சிக்கு முழுக்குப் போட்டு விட்டது!

> ❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
> எஸ். நாகராஜன்
> மேலப்பாதி, தரங்கம்பாடி தாலுகா - 609 304.

# சினிமா உலகில் ஒரு நிஜ மோதல்!

— ஒரு முழுமையான ரிப்போர்ட்

தமிழ்ப் படங்களில்தான் விறுவிறுப்பு இல்லையே தவிர, தமிழ்த் திரைப்பட உலகில் புதுப்புது மோதல்களும், திடீர் திருப்பங்களும் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. அதன் லேட்டஸ்ட் கிளைமாக்ஸ் தான் தொழிலாளர் யூனியன்களின் வேலை நிறுத்தம்.



• பாலு மகேந்திரா

'பாலு மகேந்திரா டைரக்ஷனில் 'ராமன் அப்துல்லா' படத்திற்கான படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்த போதுதான் ' இந்த க்ளைமாக்ஸ் காட்சிக்குப் பிள்ளையார் சுழி போடப்பட்டது. சினிமா தொழிலாளர் சம்மேளனத்தின் (ஃபெஃப்ஸி) தலைவரான விஜயன் அந்த இடத்துக்கு ப் பேரனார். அங்கே வாக்குவாதம். 'யாரும் வேலை செய்யக் கூடாது, பேக் அப்' என்று சொல்லிவிட்டார். ஷூட்டிங் நின்று போனது.

''என்னுடைய படப்பிடிப்பின் போது ஃபெஃப்ஸி தலைவர் விஜயன் மற்றும் அவரது தரப்பினர் நடந்து கொண்ட முறையை, நூறு சதவீதம் அடாவடித்தனம் என்றுதான் சொல்ல வேண்டும். அவர்களது அமைப்பின் உறுப்பினரல்லாத நடிகர்களை என் படத்தில் நான் நடிக்க வைப்பது தவறு என்று அவர்கள் கருதினால் என்ன செய்திருக்க வேண்டும்? அதே ஃபெஃப்ஸியுடன் இணைந்த டைரக்டர்கள் யூனியனில் நான் உறுப்பினர். எனவே, டைரக்டர்கள் சங்கத்துக்கு, நான் செய்வது தவறு என்று சுட்டிக்காட்டி இருக்க வேண்டும். இவர் அதைச் செய்யவில்லை. நேரே ஷூட்டிங் ஸ்பாட்டுக்கு வந்து, தடாலடியாய் காரியங்களில் ஈடுபட்டுவிட்டார்.

''ஷூட்டிங் ஸ்பாட்டுக்கு வந்தவர், என்ன செய்திருக்க வேண்டும்? என்னிடம் பிரச்னையைப் பற்றிப் பேசி இருக்க வேண்டும். அதைச் செய்யாமல், தாறுமாறாகப் பேசிவிட்டு, 'பேக் அப்' என்று சொல்லி, ஷூட்டிங்கை நிறுத்த இவர் யார்? தலைவர் என்பதால் எவரும் தட்டிக் கேட்க முடியாது என்ற நினைப்பில், அத்து மீறி நடந்து கொண்டுவிட்டு, அதன் பின், கற்பனை செய்து தினம் ஒரு காரணம் கற்பிக்கிறார்; பிரச்னையை திசை திருப்பப் பார்க்கிறார்!'' என்கிறார் பாலு மகேந்திரா.

ஒரு ஷூட்டிங்கை எப்போது முடித்து, பேக் அப் சொல்ல வேண்டும் என்பது டைரக்டருக்குரிய உரிமை. வேறு யாருக்கும் 'பேக் அப்' என்று கூறி ஷூட்டிங்கை நிறுத்தக் கூடிய அதிகாரம் கிடையாது என்பதால்

• கே.ஆர்.ஜி



சினிமா டைரக்டர்கள் மத்தியில் இந்த சம்பவம் பரபரப்பை ஏற்படுத்தி விட்டது.

ராமன் அப்துல்லா படத்தின் தயாரிப்பாளரான கோவை முருகேசன், தமது படப்பிடிப்பை தொழிலாளர் சம்மேளனத்தைச் சேர்ந்தவர்கள் நிறுத்தியது அத்து மீறிய செயல். இதற்குத் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று தமிழ் திரைப்படத் தயாரிப்பாளர் கவுன்சிலில் புகார் கொடுத்தார். ஒரு தலைப் பட்சமாக நேரடி நடவடிக்கையில் இறங்கிய தொழிலாளர் சம்மேளனத்தினரே, நடந்த சம்பவத்துக்குத் தன்னிலை விளக்கம் தருகிறார்களா என்று தயாரிப்பாளர்கள் தரப்பில் காத்திருந்தார்கள்.

இதற்குள், தமது புகாரின் மேல், தயாரிப்பாளர் கவுன்சில் நடவடிக்கை எடுக்கவில்லை என்றால், கவுன்சில் அலுவலகம் முன்பு, நீதி கேட்டு உண்ணாவிரதம் இருக்கப் போவதாக ராமன் அப்துல்லா படத்தின் தயாரிப்பாளர் முருகேசன் அறிவித்தார்.

இதனால் தயாரிப்பாளர்களுக்கு இந்த விஷயம் மானப் பிரச்னை ஆகிவிட்டது. தன்னிச்சையாய், தொழிலாளர் சம்மேளனத்துக்காரர்கள் ஷூட்டிங் நடந்த இடத்துக்குப் போய் எதேச்சாதிகாரத்துடன் நடந்து கொண்டு, படப்பிடிப்பை நிறுத்தியது, தயாரிப்பாளர்களை உரசிப் பார்க்கிற காரியம் என்று அறிக்கை விட்டு, அதைக் கண்டிக்கும் விதமாக, இந்த மாதம் ஐந்தாம் தேதியன்று அனைத்து படப்பிடிப்புகளையும் தயாரிப்பாளர்கள் ரத்து செய்தனர்.



• விஜயன்

இதற்கிடையே, தயாரிப்பாளர்களுக்கும், சினியோகஸ்தர்களுக்குமிடையிலான பிரச்னைகள் ஏறக்குறைய தீர்ந்து, ஒரு சுமுகமான சூழ்நிலை நிலவுகிற கட்டத்தில், தமிழ்ப் படங்களின் தயாரிப்பு செலவைக் குறைக்க வேண்டிய கட்டாயம் உணரப்பட்டது. அதற்காக, தயாரிப்பில் உள்ள படங்களின் படப்பிடிப்பை ஜூலை மாதத்துக்குள் முடித்துவிட்டு, ஆகஸ்டு முதல் சில காலம் படத் தயாரிப்புப் பணிகளை தாற்காலிகமாய் ஒத்திவைத்து விட்டு, தயாரிப்புச் செலவுகளை நாற்பது சதவீதம் வரை குறைப்பதற்கான வழிமுறைகளை ஆராய்வது என்று தீர்மானிக்கப்பட்டது.

ஆனால், தயாரிப்பாளர்களுடன் மோத ஆரம்பித்து விட்ட சம்மேளனம், இதைச் சரியான கோணத்தில் பார்க்காமல், தமது உறுப்பினர்களிடம் திசை திருப்பி, தயாரிப்பு செலவைக் குறைக்கிறேன் என்று சொல்லி, தொழிலாளர் ஊதியத்தைக் குறைக்கப் பார்க்கிறார்கள், என்று பிரசாரம் செய்ததாகத் தயாரிப்பாளர்கள் தரப்பில் சொல்லப்படுகிறது.

## அது என்ன ஃபெஃப்ஸி ?

**Film Employees Federation of South India என்பதன் சுருக்கம்தான் FEFSI (ஃபெஃப்ஸி). இது, திரையுலகின் பல்வேறு பிரிவுகளையும் சேர்ந்த 25 சங்கங்களின் சம்மேளனம். தென்னிந்திய டைரக்டர்கள் சங்கம், ஒளிப்பதிவாளர்கள் சங்கம், எடிட்டர்கள் சங்கம், கதை, வசனகர்த்தாக்கள் சங்கம், மேக்அப் கலைஞர்கள் சங்கம் என்று ஆரம்பித்து, இசைக் கலைஞர்கள், நடனக் கலைஞர்கள் சங்கங்கள் உட்பட, டிரைவர்கள், சமையல் ஊழியர்கள், பெண் ஊழியர்கள், வரை அனைத்தும் இதில் அடங்கும். இந்த சம்மேளனத்தில் லேட்டஸ்ட்டாய் சேர்ந்திருப்பதுதான் (விஜயகுமார் தலைமையிலான) நடிகர்கள் யூனியன்.**

**இந்த அமைப்பு அரசாங்க அங்கீகாரம் பெற்ற ஒன்று. மூன்றாண்டுகளுக்கு ஒரு முறை, தென்னிந்திய திரைப்பட வர்த்தக சபையும், இந்த சம்மேளனமும் பேச்சு வார்த்தை நடத்தி, ஊதிய உயர்வு மற்றும் இதர விஷயங்கள் குறித்து ஒப்பந்தத்தில் கையெழுத்திடும். அதில் ஏதாவது பிரச்னை என்றால், மாநில தொழிலாளர் நலத்துறை ஆணையர், செய்தி, மக்கள் தொடர்புத் துறை அமைச்சர், அவசியமெனில் முதலமைச்சர் தலையிட்டு சமரசம் செய்து வைப்பதுண்டு.**

**இது தவிர, இந்த சம்மேளனத்துடன் இணைந்த சங்கங்களின் உறுப்பினர்கள் எவருக்கேனும், எந்தப் படத்திலாவது பணியாற்றியதற்கான ஊதியம் முழுமையாகவோ, பகுதியாகவோ பாக்கி இருந்தால், உறுப்பினர் தரும் புகாரின் அடிப்படையில் நடவடிக்கை எடுத்து, சம்பந்தப்பட்ட சினிமாக் கம்பெனியிடமிருந்து வர வேண்டிய பாக்கியை வசூலித்துத் தரும் பணியையும் சம்மேளனம் செய்கிறது.**



"இப்பல்லாம் நம்ம தலைவர் ஜோரா பதில் சொல்ல கத்துக்கிட்டாரு!"

"எப்படிச் சொல்றே?"

"தஞ்சை தீ விபத்துக்கு என்ன காரணம்னு ஒரு நிருபர் கேட்டதுக்கு, 'தீ தான்'னு பதில் சொல்லியிருக்காரு!"

— புளியரை கணேசன்



"படத்தயாரிப்புச் செலவில், தொழிலாளர் ஊதியம் என்பது மிக சொற்பம். அப்படி இருக்கும் போது, அந்தத் தொழிலாளர் வயிற்றிலடிக்க வேண்டிய அவசியமென்ன? பத்து ரூபாய் கொடுக்க வேண்டிய இடத்தில், பன்னிரெண்டு ரூபாய் கொடுத்து, சீக்கிரம் வேலையை முடிக்கப் பார்ப்போமா? இல்லை ரெண்டு ரூபாய் குறைத்து, பிரச்னையாக்கப் பார்ப்போமா?" என்று கேட்கிறார் தயாரிப்பாளர் கே.ஆர்.ஜி.

தயாரிப்புச் செலவைக் குறைக்க மொத்த படங்களின் எண்ணிக்கையைக் கட்டுப்படுத்துவது முதல், பிலிம், லொக்கேஷனில் சிக்கனம் பிடிப்பது வரை எத்தனையோ வழிகள் உண்டே என்பது அவரது வாதம்.

ஓராண்டுக்கு முன்பு, முதலமைச்சர் முன்னிலையில் சினிமாத் துறையின் பல்வேறு பணிகள் சம்பந்தப்பட்ட தொழிலாளர்களுடைய ஊதிய உயர்வு பற்றி இந்த சம்மேளனத்துக்கும், தென்னிந்திய திரைப்பட வர்த்தக சபைக்கும் பேச்சுவார்த்தை நடந்தது. முதலமைச்சரே தலையிட்டு, காண்ட்ராக்ட் அடிப்படையில் பணிபுரிபவர்களுக்கு 30% ஊதிய உயர்வும், தினக்கூலியாய் பணிபுரிபவர்களுக்கு 50% உயர்வும் தரும்படி கூறிவிட்டார்.

"கொள்கை ரீதியில் அதை இருதரப்பினரும் ஒப்புக் கொண்டு விட்டாலும் நாளது தேதி வரை அந்த ஒப்பந்தம் கையெழுத்தாகவில்லை. சேம்பர் தரப்பில் தாமதப்படுத்தப்படுகிறது. உயர்த்தப்பட்ட ஊதிய ஒப்பந்தத்தில் கையெழுத்திடுவதை தாமதப்படுத்த தயாரிப்பாளர்கள் முயற்சி செய்கிறார்கள்!" என்று அறிக்கை விட்டிருக்கிறார் சம்மேளனத்தின் தலைவர் விஜயன்.

"சம்மேளனத்தில் இருபத்தைந்து சங்கங்கள் உள்ளன. முதல்வர் முன்னிலையில் கொள்கை அளவிலான உடன்பாடு ஏற்பட்டாலும், அந்த இருபத்தைந்து சங்கங்களுடனும், ஊதியம் மட்டுமின்றி வேலை நேரம், இதர விஷயங்கள் என்று பல சமாசாரங்கள் குறித்தும் தனித் தனியே விரிவாகப் பேசித்தான் ஒப்பந்தம் தயார் செய்து கையெழுத்திட வேண்டும். அதனால்தான் காலதாமதம். ஆனாலும், முதல்வர் முன்னிலையில் உயர்த்தப்பட்ட ஊதிய விகிதம், உடனடியாக அமல்படுத்தப் பட்டு விட்டது" என்கிறார் கே.ஆர்.ஜி.

"நடந்த சம்பவங்களுக்குத் தயாரிப்பாளர் சங்கம் பகிரங்க மன்னிப்பு கேட்க வேண்டும்!" என்கிறார் சம்மேளனத் தலைவர் விஜயன்.

"எங்கள் தயாரிப்பாளர் சங்க உறுப்பினரது படப்பிடிப்பை நிறுத்தி, அவமானப்படுத்தியதைக் கண்டிக்கிற அடையாளமாகத்தான் ஷூட்டிங்குகளை ஒரு நாள் ரத்து செய்தோம். மரபுக்குப் புறம்பாக கால வரையற்ற வேலை நிறுத்தம், அறிவித்தது அவர்கள்தான். இதில் நாங்கள் மன்னிப்புக் கேட்க வேண்டிய அவசியம் எங்கே வந்தது?" என்கிறார்கள் தயாரிப்பாளர்கள் தரப்பில்.

— கௌதம்



"எதெதுக்குத்தான் 'ஸ்டே' கேக்கிறதுன்னு ஒரு விவஸ்தையே கிடையாது போலிருக்கு!"

"ஏன், என்ன ஆச்சு?"

"நடிகை நளினாஸ்ரீ தனக்கு வயசு ஏறக் கூடாதுன்னு ஸ்டே கேட்டு கோர்ட்டில் வழக்குப் போட்டு இருக்காங்க!"

— வெ. ராஜாராமன்



"இப்பத்தான் என்னோட பிரண்டைப் பார்த்திட்டு வர்றேன். அரவணைப்புக்குப் புது அர்த்தத்தையும் உணர்ந்தேன். அவளுக்கு எயிட்ஸ். இப்படிப் பட்டவர்களை நாம் வெறுக்கக் கூடாது!'' என்கிற வசனங்களைப் பேசும் ஓர் இளம் பெண்ணை அடிக்கடி டெலிவிஷன் விளம்பரங்களில் பார்த்திருப்பீர்கள். அவர்தான் செல்வி சொர்ணமாலிகா.

ஆதர்ஷ் வித்யாலயாவில் +2 படிக்கும் சொர்ணமாலிகாவின் ஆசை, விளம்பரப் படங்களில் நடித்து, அதன்மூலம் சினிமாவில் இடம் பிடிப்பதல்ல.

"எயிட்ஸால் பாதிக்கப்பட்டவர்களை வெறுத்து ஒதுக்காமல், அவர்களிடமும் நாம் மனித நேயத்தோடு நடந்து கொள்ள வேண்டும் என்று வலியுறுத்துகிற விளம்பரம் அது. அதனால்தான் அதில் நடிக்க ஒப்புக் கொண்டேன். இதேபோல் ரத்த தானம் பற்றிய விழிப்புணர்வைத் தரும் ஒரு விளம்பரப் படத்திலும் நடித்திருக்கிறேன். இதற்கெல்லாம் காரணம், பணம் கிடைக்குமென்றோ, பிற்காலத்தில் சினிமாவில் நுழைவதற்கு, இதெல்லாம் உதவியாக இருக்குமென்றோ அல்ல!"



"பின் என்னவாவதுதான் லட்சியம்?"

"நான் மிகவும் விரும்பிச் செய்வது பரதநாட்டியம். அதில் சிறப்பாக வர வேண்டுமென்பதுதான் என் லட்சியம்."

"படிப்பு?"

"டாக்டர், இன்ஜினியர், வக்கீல் என்கிற ஆசைகளும் எனக்குக் கிடையாது. நாட்டியத்தோடு, டெலிவிஷன், பத்திரிகை போன்ற மக்

# "நான் நடிக்க வேண்டுமானால்..."

## - இவர் போடும் கண்டிஷன்!

பின் எதற்காகவாம்?

"இந்த இரண்டு விளம்பரப் படங்களிலும் உள்ள சமூக அக்கறைதான் அவற்றில் நான் நடித்ததற்கான ஒரே காரணம்!"

"சினிமா வாய்ப்பு வந்தால் ஒதுக்கி விடுவீர்களா என்ன?"

"நிச்சயமாக. எனக்குப் பணமோ, புகழோ பிரதானமல்ல. சமூக அக்கறையும் பொறுப்பும் தான் முக்கியம். இதில் எந்தவிதமான மாற்றத்தையும் எப்போதும் செய்து கொள்ள மாட்டேன்!" என்று அடித்துச் சொல்லுகிறார்.

கள் தொடர்புச் சாதனங்களில் பணிபுரியத்தான் ஆசை!" என்று சொர்ணமாலிகா சொன்னாலும் வக்கீல்களாகப் பணியாற்றும் அவரது பெற்றோர்கள் என்ன சொல்லுகிறார்கள்?

"அவளுடைய ஆசைகள் ஆரோக்கியமானவையாக இருக்கிறபோது, அவற்றுக்கு நாம் எதற்காகத் தடை சொல்ல வேண்டும்?" என்கிறார்கள் அவர்கள்.

— பிரின்ஸ்

அட்டை வண்ணப்படமும், படமும்:
**பிரவீண்குமார்**

வட்டமேஜை

# ஒவ்வொரு கார்ட்டூனும் ஒரு தலையங்கத்துக்குச் சமம்!

◆ நம்ம 'கல்கி'க்கு இந்த வார ''ஹைலைட்''டே கார்ட்டூன்கள்தான்! ஒவ்வொரு கார்ட்டூனும் ஒரு தலையங்கத்துக்குச் சமமாக இருந்தது.

வ. திருநாவுக்கரசு.
மணியம்பட்டு.

◆ 'கொள்ளையடா சாமி' படித்தேன். எல்லாம் பள்ளிக்கூடத்திலேயே வாங்க வேண்டும் என்பதைக் கேட்டு நொந்து போன ஒரு தகப்பனார், ''பையன் ஹேர் கட்டிங்கையாவது விரும்புகிற சலூனில் செய்து கொள்ளலாமா?'' என்று கேட்க, பிரின்சிபால் முகத்தில் சூரியப் பிரகாசத்துடன், ''அருமையான ஆலோசனை சொன்னீர்கள்! மாணவர்கள் ஒரே மாதிரி முடியலங் காரத்துடன் இருந்தால்தான் 'டிசிப்ளின்' வரும். விரைவில் பள்ளியிலேயே ஒரு சலூன் ஆரம்பித்து விடுகிறோம். குறைந்த கட்டணம் 30 ரூபாயில் இனி எல்லோருக்கும் இங்கேயே முடி வெட்டிக் கொள்ள வேண்டும்'' என்றாராம்!

நிட்லபாக்கம். அ. ஷண்முகசுந்தரம்.

◆ பொன். பரமகுரு அவர்களின் பேட்டி கண்டேன். தம்மை ஒரு சமூகத்தின் பிரதிநிதியாகக் காட்டிக் கொண்டு, பின்னர் தாம் அனைத்து மக்களுக்கும் சாதி வேறுபாடின்றிச் சேவை செய்வேன் என்று சொல்லு வது முரண்பாடாயிருக்கிறது. சசி கலாவை இரண்டு கோடி தேவர் இன மக்களின் தலைவி என்று முன்பு இவர் குறிப்பிட்டதும் அத்தனை கலபத்தில் மறப்பதிற்கில்லை.

ப. சுகுமார்.
தூத்துக்குடி - 1.

◆ 'சாதி, இன, மத பாகுபாடெல்லாம் எனக்கில்லை' என்று கூறும் பொன். பரமகுரு அவர்கள் மாவட்டங் களிலும், போக்குவரத்துக் கழகங்களிலும் உள்ள ஜாதி, இனத் தலைவர்களின் பெயரை நீக்கத் தமது யோச னையைக் கூறாமல், பூலித்தேவன் பெயரில் போக்கு வரத்துக் கழகம் தொடங்குவதை நியாயப்படுத்திப் பேசி இருப்பது பொருத்தமாக இல்லை.

எஸ். விஜயலட்சுமி.
ஸ்ரீவில்லிப்புத்தூர்.

◆ ஜால்ரா ஜனநாயகத்தைச் சாடிய தலையங்கம் உட் கட்சித் தேர்தலை நடத்திக் கொண்டிருக்கும் அரசியல் கட்சிகளுக்குச் சாட்டையடி. பிரிட்டன் எதிர்க் கட்சிகளின் நிழல் அமைச்சரவையை எடுத்துக்காட்டி விளக்கியது பாராட்டுக்குரியது.

ஆர்.பி. ஜெயச்சந்திரன்.
பூனாம்பாளையம்.

◆ சொத்துக்கள் சேர்க்கவும் பதவி ஆசைக்கும் கட்சி யில் சேருபவர்கள் மத்தியில், வயதான பிறகு கட்சி யில் சேர்ந்து, கட்சிக்காக உழைப்பேன் என்கிறாரே அண்ணாவின் வளர்ப்பு மகன். அண்ணா அவர்கள் தமது மகனை வளர்த்த விதம் அப்படி!

தேனம்மாள் ராமசாமி.
பெருமாள்பட்டி.

◆ 'தஞ்சாவூருக்கு ஒரு விசிட்' கட்டுரையைப் படித்ததும் பல விஷயங்கள் புரிந்தன. வண்ணப்படமும் என் மனதைக் கொள்ளை கொண்டது. கும்பாபிஷேக நாளில் தஞ்சாவூர் கோயிலைப் பற்றி வெளியிட்டுத் தஞ்சாவூர்க்காரர்களான எங்களைப் பெருமைப் படுத்தி விட்டீர்கள். மிக்க நன்றி.

அம்மனூர் என். சாம்பமூர்த்தி.
திருச்சி - 18.

◆ சமகால நிகழ்வுகளைப் பிரதிபலித்த அற்புதப் படைப்பு... 'என் கதை' சிறுகதை. மனிதம் தொலைத்த மானுடர்களின் வக்கிரத்தைக் கலாபூர்வ மாக உணர்த்திய மேலாண்மை பொன்னுச்சாமி பெரிதும் பாராட்டிற்குரியவர்.

எம். பாலசுப்ரமணியன்.
வலையப்பட்டி.

◆ தன் மக்களுக்காகக் கட்சி நடத்துகின்ற இன்றைய அரசியல்வாதிகள் மத்தியில், கட்சிப் பணத்தில் தம் மக்களுக்கு விமானப் பயண டிக் கெட் வாங்கியதைக் கண்டித்த அத்வானி, தாம் ஓர் அபூர்வமான தலைவர் என்பதை நிரூபித்து விட்டார்.

செ. மலர்விழி.
மதுரை - 10.

◆ பலதரப்பு விஷயங்களையும் கவனத்தில் கொள்ளும் அரசு, ஜாதிக்கலவரம் குறித்த கேள்விக்குத் தராக அளித்திருக்கும் பதிலையும் கவனிக்க வேண்டும் என்பது என் போன்ற வாசகர்களின் பிரயாசை மட்டுமல்ல, வேண்டு கோளும் கூட.

பாரதி இளங்கோவன்.
மதுரை - 14.

**வலம்புரி ஜான்**

# மரணத்தை வென்ற மாமன்னன்



ரசன் ஞானியாய் இருந்தது உண்டு; ஆனால் ஞானியே அரசனானான். அவன்தான் தாவீது அரசருக்கும், பத்சேபாவிற்கும் பிறந்த சாலமோன். தாவீது, பத்சேபாவிற்குக் கொடுத்த வாக்குறுதியின் படியே சாலமோன் அரியணை ஏறினார். இவரது காலம் வரைக்கும் இஸ்ராயேலர்கள், தொழுகைமேடுகளில்தான் ஆண்டவருக்குப் பலி செலுத்தி வந்தார்கள்.

இறைவனுக்கு ஆலயம் ஒன்றை எழுப்ப வேண்டும் என்கிற எண்ணம் முதன்முதலாகச் சாலமோன் மன்னனுக்கே வந்தது. "இந்த ஆலயத்தை இடித்துப் போடுங்கள்; இதை மூன்றே நாளில் நான் மீண்டும் கட்டுவேன்" என்று இயேசு பெருமான் பலநூறு ஆண்டுகளுக்கும் பிறகு, சாலமோன் கட்டிய ஆலயத்திற்கு அருகிலிருந்து தான் பேசினார்.

ஒருநாள் சாலமோன் அரசர், ஆண்டவருக்குப் பலி செலுத்துவதற்காகக் கிபயோன் என்ற இடத்தில் உள்ள தொழுகை மேட்டுக்குச் சென்றார். அந்த இரவில் சாலமோன் தூங்கிப் போன போது, கனவில் அவருக்குக் கடவுள் தோன்றினார். ''உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள்!" என்று கடவுள் கேட்டார். அதற்குச் சாலமோன் ''ஆண்டவராகிய கர்த்தரே! எனது தந்தையான தாவீது அரசருக்குப் பிறகு அவரது அரியணையை எனக்கே நீர் வாய்க்கப் பண்ணினீர்! தோத்திரம்! நான் செய்வதறியாத சிறுபிள்ளை. திரளான உமது மக்கள் கூட்டத்தில் நான் ஒருவன். நன்மை எது, தீமை எது என்று அறிந்து, மக்களுக்கு நீதி வழங்கும்படியான ஞானத்தை எனக்குத் தந்தருளும்'' என்று மன்றாடினார்.

'என் வாழ்நாள் பெருகட்டும்; எல்லைகள் விரியட்டும்; பகைவர் தலை உருளட்டும்; பார்க்கும் இடமெல்லாம் பணத்தோட்டம் செழிக்கட்டும்' என்று எதுவுமே கேளாமல், 'ஞானத்தைக் கொடு இறைவா' என்று கேட்கிறாரே சாலமோன் என்பதில் ஆண்டவர் அளவற்ற ஆனந்தம் அடைந்தார். ஞானம்

**வெளிச்சத்தின் விலாசம்**

**11**



ஒன்றுதான் எளிதில் பெற முடியாத செல்வம் என்பதைப் பிள்ளைப் பிராயத்திலேயே தெரிந்து வைத்திருந்த சாலமோனைப் பார்த்து இறைவன், "நீ நெடுநாள் வாழ்ந்திருக்க வேண்டும் என்றும் கேட்கவில்லை; எதிரிகள் மடிந்து மாய்ந்து விட வேண்டும் என்றும் கேட்கவில்லை. மாறாக நீதி வழங்குவதற்குத் தேவையான ஞானத்தை மாத்திரமே கேட்டிருக்கிறாய். இதோ இப்பொழுதே நீ கேட்டபடியே தருகிறேன். உனக்கு முன்னாலும், பின்னாலும் உனக்கு நிகராக எவரும் இருந்ததில்லை என்று உலகம் பேசுகிற அளவிற்கு ஞானமும், பகுத்தறிவும் நிறைந்த உள்ளத்தை உனக்கு வழங்குகிறேன். என் வழிகளில் நீ நடந்தால், நெடுநாள் நீ வாழ்ந்திருப்பாய்" என்றார். சாலமோன் கேட்டதும் கிடைத்தது; கேளாததும் வாய்த்தது என்று மகிழ்ச்சியடைந்தார்.

ஒருநாள், இரு விலைமாதர் சாலமோன் அரசர் முன்னிலையில் வந்து நின்றார்கள்.

அவர்களுள் ஒருத்தி "என் தலைவரே! இந்தப் பெண்ணும் நானும் ஒரே வீட்டில் குடியிருக்கிறோம். அந்த வீட்டில் அவள் என்னுடன் இருந்தபோது நான் ஒரு குழந்தையைப் பெற்றெடுத்தேன். என் குழந்தை பிறந்து மூன்று நாட்கள் ஆன பின்பு அவளும் ஒரு குழந்தையைப் பெற்றெடுத்தாள். அந்த வீட்டில் எங்கள் இருவரைத் தவிர வேறு எவரும் இல்லை. இரவில் தூங்கும்போது இவள் தன் மகன் மீது புரண்டு விட்டதால் அவன் இறந்து போனான். அவள் நள்ளிரவில் எழுந்து உமது அடிாவளாகிய நான் தூங்கிக் கொண்



டிருக்கையில், என்னருகில் கிடந்த என் மகனை எடுத்துத் தன் நெஞ்சருகில் வைத்துக் கொண்டு, இறந்துவிட்ட தன் மகனை என் நெஞ்சருகில் கிடத்தி விட்டாள்.

"விடியற்காலையில் பிள்ளைக்குப் பால் கொடுக்க நான் எழுந்தபோது, ஐயோ! அது செத்துக்கிடந்தது. சற்று விடிந்த பின்னர் பிள்ளையை உற்றுப் பார்த்தபோது, அது நான் பெற்ற பிள்ளை அல்ல என்று கண்டு கொண்டேன்" என்றாள். இதைக் கேட்ட மற்றவளோ, "இல்லை! உயிரோடிருப்பதே என் பிள்ளை; செத்துப் போனது உன் பிள்ளை" என்றாள். முதல் பெண்ணோ, "இல்லை! செத்த பிள்ளை தான் உன்னுடையது; உயிரோடிருப்பது என்னுடையது" என்று வாதாடினாள். அரசவையிலிருந்த எல்லோரும் ஆச்சரியத்தோடு அந்த இரண்டு தாய்மார்களையுமே மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அப்போது அரசர், "என்ன இது? ஒருத்தி உயிரோடு இருக்கிற இவன் என் மகன்; செத்து விட்டவன் உன் மகன் என்கிறாள். மற்றவளோ, இல்லை செத்து விட்டவன் உன் மகன், உயிரோடிருக்கிறவன் என் மகன் என்கிறாள்" என்றார். பிறகு அரசர் ஒரு வாளைக் கொண்டு வாருங்கள் என்றார். அவ்வாறே அவர்கள் அரசரிடம் ஒரு வாளைக் கொண்டு வந்தனர். பிறகு அரசர் "உயிரோடிருக்கும் குழந்தையை இரண்டாக வெட்டி, ஒரு பாதியை ஒருத்தியிடமும், மறுபாதியை மற்றொருத்தியிடமும் கொடுங்கள்" என்றார்.

உடனே உயிரோடிருந்த பிள்ளையின் தாய், தன் மகனுக்காக நெஞ்சம் பதறி ஓலமிட்டு அழுதாள். தலைவிரி கோலமாக "அரசே! என் மகனைக் கொல்ல வேண்டாம்; உயிரோடிருக்கும் குழந்தையை அவளிடமே கொடுத்து விடுங்கள்" என்று அழுதாள். மற்றவளோ "அது உனக்கும் வேண்டாம்; எனக்கும் வேண்டாம்; இதை இரண்டாக வெட்டுங்கள்" என்றாள். "உயிரோடிருக்கும் அந்தக் குழந்தையைக் கொல்ல வேண்டாம்; முதல் பெண்ணிடமே கொடுங்கள்; அவள்தான் குழந்தையின் உண்மையான தாய்" என்று முடிவு கூறினார் சாலமோன் அரசர்.

சாலமோன் அரசர் அளித்த தீர்ப்பு இஸ்ராயேல் மக்களின் இல்லங்கள் தோறும் பேசப் படுவதாயிற்று. தீர்ப்பளிக்கிற அசாதாரணமான ஞானத்தைக் கடவுள் சாலமோனுக்கு அளித்திருப்பதைக் குறித்து அவர்கள் அனைவருமே ஆண்டவரைத் தோத்தரித்தார்கள்.

சாலமோன் அரசரின் அளவற்ற ஞானம், தீர்ப்பளிக்கிற வல்லமை ஆகியவற்றைக் கேள்விப்பட்டு அக்காலத்தில் புகழ் மிக்கவளாக விளங்கிய சேபா நாட்டு அரசி தனது பரிவாரங்களோடும், நறுமணப் பொருட்களோடும், கப்பல்களில் நிரப்பப்பட்ட பொன்னோடும், விலை உயர்ந்த கற்களோடும் சாலமோன் அரசரைப் பார்ப்பதற்காக வந்தாள். சேபா நாட்டு அரசி சாலமோன் அரண்மனையில் தங்கி இருந்த காலத்தில் தனது தோழிப் பெண்களைக் கொண்டு நந்தவனத்து மலர்களால் ஒரு மாலையைக் கட்டினாள். அந்த மாலையைப் போலவே தோற்றமளிக்கிற ஒரு காகித மாலையையும் கட்டினாள். இந்த இரண்டு மாலைகளையும் சாலமோனின் அரச மண்டபத்திற்கு சேபா நாட்டு ராணி எடுத்துச் சென்றாள். அவள் சாலமோன் அரசனின் முன்பாக நின்றுகொண்டு, இரண்டு மாலைகளையும் கைக் கொன்றாகப் பிடித்து "அரசே! இதில் எது உண்மையான இயற்கை மாலை?" என்று கேட்டாள். அரசரோ ஒரு நிமிடம்கூட தாமதிக்காமல், அரண்மனை மண்டபத்தின் ஜன்னல் கதவுகளைத் திறந்து விடுங்கள் என்று தமது சேவகர்களுக்கு உத்தரவிட்டார். சற்று நேரத்தில் தேனீக்கள் ஒரு மாலையில் மாத்திரமே உட்கார்ந்தன. அந்த மாலைதான் உண்மையான மாலை என்று அரசர் தீர்ப்பளித்தார். அரசரின் விரைவான, ஆனால் உறுதியான, தவறில்லாத தீர்ப்பைப் பார்த்து சேபா நாட்டு அரசி வாயடைத்துப் போனாள்.

பல்வேறு கேள்விகளால் சேபா நாட்டு அரசி சாலமோன் அரசனின் ஞானத்தைச் சோதித்தாள். ஆண்டவன் அருளிய ஞானத்தால், சேபா அரசியின் எந்தக் கேள்வியும் சாலமோன் அரசனுக்குக் கடினமாக இருக்கவில்லை. அவள் மாதக்கணக்கில் விருந்தாளியாக சாலமோனின் அரண்மனையில் தங்கி இருந்தாள். அரசரது கட்டடக் கலை, சிற்ப வாகு, பரிசாரகர் நேர்த்தி - இப்படி எல்லாவற்றையும் அருகிலிருந்து சேபா நாட்டு அரசி அறிந்து கொண்டாள். இறுதியாக அரசியார் தமது நாட்டுக்குப் புறப்பட்டபோது "உமது மனைவிமார்கள் பேறு பெற்றோர்; உமது ஞான மொழிகளை எப்போதும் கேட்டுக் கொண்டிருக்கிற உமது பரிசாரகர்களும் கொடுத்து வைத்தவர்கள்! இறைவனது திருநாமம் புகழப்படக்கடவது" என்று வாயார வாழ்த்தி விட்டுப் போனாள். சாலமோன் அரசரும் சேபா நாட்டு ராணிக்கு எண்ணிலடங்காத பரிசுப் பொருட்களைக் கொடுத்தனுப்பினார்.

அந்நாளில் உலகில் வேறு எங்கும் இல்லாதபடி சாலமோன் அரசர் இறைவனுக்கு ஓர் ஆலயத்தை நிர்மாணித்தார். இதைக் கட்டி முடிக்க ஏழு ஆண்டுகள் ஆனது. தொலை தூரத்திலிருந்து பரிசாகவும், விலைக்குமாக

**ஜனங்களை நோக்கி ஜனநாயகம்**



சமீபத்தில் ஈரானில் நடந்த ஜனாதிபதி தேர்தலில் ஓட்டுப் போட வாக்குச் சாவடிக்கு வர இயலாத நோயாளிகள் ஆஸ்பத்திரியிலேயே வாக்களிக்க வசதி செய்யப்பட்டது.

தகவல்:
வேடபட்டி கற்குவேல்

வந்த அற்புதமான மரங்களாலும், பொன்னாலும் இவ்வாலயம் எழுப்பப் பட்டது. தீர் நாட்டின் மன்னன் ஈராம் இந்த ஆலயத்திற்குத் தேவைப்பட்ட கேதுரு, நூக்கு ஆகிய மரங்களையும், பொன்னையும் சாலமோனுக்குக் கொடுத்து அதற்குப் பதிலாக கலிலேயாவில் உள்ள இருபது ஊர்களை அவரிடமிருந்து பெற்றார். இந்த இருபது ஊர்களும் பொட்டல் காடாக இருந்ததை ஈராம் தெரிந்து கொண்டான். ஆகவே இந்த நிலப்பரப்பிற்குக் 'காபூல்' (பொட்டல் நிலம்) என்று பெயர் வந்தது. சாலமோன் உலகத்தில் எந்த அரசருக்கும் அந்த நாளில் வாய்த்திராத அரண்மனை ஒன்றைக் கட்டினார். உலகத்தின் பல பாகங்களிலும் இருந்து அவரது ஞானத்தை வியந்து அவரைப் பார்க்க வந்தவர்கள் பரிசுப் பொருட்களால் அந்த அரண்மனையை நிறைத்தார்கள். அவர் காலத்தில் அவரைப் போன்ற செல்வந்தர் உலகத்தில் ஒருவரும் இருக்கவில்லை. கி.மு. பத்தாம் நூற்றாண்டின் வரலாறு என்பது சாலமோன் வாழ்ந்த வாழ்க்கை என்று ஒரே வரியில் உச்சரித்து விடலாம்.

அரசனே எனினும் ஆண்டிதான் என்றாலும் அவரவரின் வீழ்ச்சிக்கான விதைகள் அவர்களுக்குள்ளேயே விதைக்கப்பட்டுள்ளன. இதற்குச் சாலமோன் மாத்திரம் விதிவிலக்காக இருக்க இயலுமா? அளவற்ற ஞானம், செழிப்பான செல்வம், கடல் கடந்த புகழ், பாரம்பரியப் பெருமை, எல்லாவற்றுக்கும் மேலாக இறைவனின் பிரசன்னம் இவ்வளவு இருந்தும் பாரவோன் மகளைத் தனது துணை மயிலாக்கிக் கொண்ட சாலமோன் அரசர், தமது இச்சைக்கு மாத்திரம் இடைவேளை இல்லாமல் பார்த்துக் கொண்டார். சாலமோனுக்கு எழுநூறு அரசகுலப் பெண்கள் மனைவியர்களாகவும், முந்நூறு பெண்கள் வைப்பாட்டிகளாகவும் இருந்தார்கள்.

உலகத்தாருக்கு ஞானத்தை வாரி வழங்கிய சாலமோனின் புத்தி பேதலித்தது. கண் மண் தெரியாமல் பெண்கள் பட்டாளத்தைக் கட்டிக் கொண்டதால் அவர் முதுமை அடைந்தபோது, அயல்நாட்டுப் பெண்களான அவர்கள் தங்கள் தெய்வங்களைச் சாலமோன் வழிபடுமாறு செய்து விட்டார்கள். சாலமோன் சீதோனியரின் தேவதையான அஸ்தரேத்து, அம்மோனியரின் தேவதையான மில்க்கோம் ஆகியோரை வழிபட ஆரம்பித்தார். மட்டுமில்லாமல் சில இடங்களில் இந்தத் தெய்வங்களுக்கான தொழுகை மேடுகளையும் அவரது மனைவிமாரைத் திருப்திப்படுத்துவதற்காகக் கட்டிக் கொடுத்தார்.

இரண்டு தடவை இறைவனை நேருக்கு நேர் தரிசிக்கிற பேறு பெற்றிருந்தும்; சாலமோன் 'வேற்றுத் தெய்வங்களை வழிபடாதே; அன்னிய நாட்டுப் பெண்களை மணந்தால், நீ அவர்களின் தெய்வங்களை வழிபட வேண்டியது வரும்" என்கிற கர்த்தரின் கட்டளையை மீறினார். பெண் போகம் இறைவனின் வழியிலிருந்து சாலமோனை இடற வைத்தது. ஆகவே சாலமோனுக்கு எதிரிகளை இறைவன் உருவாக்கினார். கீர்த்தி மிக்க அரசராக கிழக்கிலும், மேற்கிலும் கொண்டாடப்பட்ட அரசர் சாலமோன், தமக்குப் பின்னால் தொங்குவது தமது வால்தான் என்று அறியாமல் அதை வளைந்து வளைந்து கடிக்கிற முயற்சியில் கழுத்தெலும்பு முறிந்து மரணித்துப் போகிற உயர்வகை நாயைப் போல, மாயை விரித்த வலையையே மரணப் படுக்கையாகக் கொண்டார். நாற்பது ஆண்டுகள் அவர் காலத்திய எந்த அரசருக்கும் இல்லாத புகழ் அவருக்கு இருந்தது. பல நூற்றாண்டுகளுக்கும் பிறகு இயேசு பெருமானே அவரது பெயரை ஒன்றுக்கும் மேற்பட்ட இடங்களில் குறிப்பிடுகிறார். சாலமோனின் இறுதிக்கால வாழ்க்கை பெண்களால் அலைக்கழிக்கப்பட்டாலும், அவரது நீதிமொழிகள் உலக இலக்கியத்தில் இன்றும் உயிர் வாழுகின்ற அற்புதங்களாகும். "ஞானமுள்ள பெண்கள் தம் இல்லத்தைக் கட்டி எழுப்புகின்றனர்; அறிவற்றவரோ தம் கைகளைக் கொண்டே அதை அழித்து விடுகின்றனர்" என்கிற நீதிமொழியைச் சாலமோன் அரசனைத் தவிர வேறு எவருக்குச் சொல்லுகிற தகுதி உண்டு?

(தொடரும்)



# கல்கி - பாலு ஜுவல்லர்ஸ்

## இணைந்து வழங்கும்

# ரூ. 50,000 நகை பரிசு!

**சிரிக்க வையுங்கள்; ஓர் ஏழைக் குடும்பம் சிறக்க வையுங்கள்!**

'தலையணை மந்திரம்' என்ற தலைப்பில் கீழுள்ள கூப்பனில் ஜோக் எழுதியனுப்புங்கள். பிரசுரத்திற்குத் தேர்வாகும் ஒவ்வொரு ஜோக்கும் 100 ரூபாய் சன்மானம் பெறும். அடுத்த வாரத்தோடு முடியப் போகும் இப்போட்டியில் யார் அதிக அளவில் வெற்றி பெறுகிறாரோ அவர் சுட்டிக் காட்டும் ஓர் ஏழைக் குடும்பத்துக்கு - அதாவது திருமணத்துக்குத் தயாராக உள்ள வசதியற்ற குடும்பத்துப் பெண்ணுக்கு ரூ.50,000 மதிப்புள்ள தங்க நகைகள் பரிசு! வெற்றி பெறும் வாசகரே வசதியற்றவராக இருந்து, அவரது மகளோ, சகோதரிகளோ திருமண வயதில் இருந்தால் அவரே இப்பரிசைப் பெறலாம்.

**கடைசி தேதி : 30.6.97**

**தலையணை மந்திரம் ஜோக் – போட்டி 11**

பெயர்:........................................................

முகவரி:........................................................

........................................................

........................................................





பொருளாதாரத் துறை நிறுவனங்களின் செயல்பாடு குறித்து போன வாரம் சொன்னேன். கடந்த சில வாரங்களாகத் தனியார் நிறுவனங்களின் செயல்பாடு குறித்த விவரங்களும் வெளி வந்து கொண்டிருக்கின்றன. பத்திரிகைகளும் சரி, தொழில் துறைக்கு நிதியுதவும் ஐ.சி.ஐ.சி.ஐ., ஐ.டி.பி.ஐ போன்ற அமைப்புகளும் சரி, கடந்த நிதியாண்டில் நமது தனியார் நிறுவனங்களின் செயல்பாடு திருப்திகரமாக இல்லை என்பதையே சுட்டிக் காட்டுகின்றன.

ஒரு சில நிறுவனங்கள் மட்டும் இலேசான முன்னேற்றம் கண்டிருக்கின்றன. ஆனால் பெரும்பாலான கம்பெனிகளின் turn over கணிசமாகக் குறைந்திருக்கிறது.

## தேவை : சுறுசுறுப்பான

(டர்ன் ஓவர் என்பது ஓராண்டில் ஒரு நிறுவனத்தில் புழங்கும் மொத்தத் தொகை) அனேக நிறுவனங்கள் இவ்வாண்டு அடைந்திருக்கிற நிகர லாபம் கூட சென்ற நிதியாண்டைக் காட்டிலும் குறைவுதான்.

கடந்த வருடம் தொழில் துறையின் சராசரி வளர்ச்சி எட்டு சதவிகிதம்தான். பண வீக்கமோ எக்கச்சக்கம்! உற்பத்திப் பெருக்கம் போதுமான அளவு இல்லை என்பதையே இந்த நிலைமை தெளிவாகச் சுட்டிக் காட்டுகிறது.

சிமெண்ட், எஃகு, கார் உற்பத்தி போன்ற பிரிவுகளில் நாம் பலமாகவே அடிவாங்கியிருக்கிறோம். இதற்கு முக்கியமாக இரண்டு காரணங்கள் சொல்லப்படுகின்றன.

முதல் காரணம், தொழில் துறையினர் கடன் பெறுவதற்குச் செலுத்தும் அபரிமித வட்டி. இரண்டாவது காரணம், தொழில் துறையில் கடந்த ஆறு மாதங்களாக நிலவும் பொதுவான மந்த நிலை அல்லது தேக்கம்.

ப. சிதம்பரத்தின் பட்ஜெட்டும் ரிசர்வ் வங்கியின் இவ்வருடத்திய கடன் கொள்கையும் இணைந்து இந்த நிலை

## கன்ஸல்டன்ஸி :

மையை மாற்ற உதவும் என்று நம்பலாம்.

ஆனால், அறிவிக்கப்பட்ட வட்டி விகிதக் குறைப்பும் பட்ஜெட் சலுகைகளும் விரைவாக நடைமுறைக்கு வருவது ரொம்ப ரொம்ப முக்கியம்.

வெறுமனே பேசியும் அறிக்கை விட்டும் பொழுதைக் கழிக்காமல், நாம் இனி செயலில் இறங்கியாக வேண்டும்.

பட்ஜெட்டில் அறிவிக்கப்பட்ட சலுகைகள் ஒவ்வொரு மனிதனுக்கும் பலன் தரும் வகையில் நடைமுறைக்கு வர அரசு இயந்திரம் மட்டுமின்றி, தொழில் துறையும் உழைக்க வேண்டும்; மனம் வைக்க வேண்டும். உதாரணமாகச் சொல்ல வேண்டுமானால், ரிசர்வ் வங்கி புதிய கடன் கொள்கை அறிவித்திருக்கிறதே, அதனால் தொழில் துறைக்குக் கணிசமாக ஆதாயம் கிடைக்க வழியுண்டு. ஆனால் ரிசர்வ் வங்கி அறிவிப்பை மற்ற வங்கிகள் விரைவாகவும் முழுமனத்துடனும் நடை

# செயல்பாடு!

முறைப்படுத்தினால்தான் இது நிகழும்.

ஒவ்வொரு கட்டத்திலும் மெத்தனமோ சிவப்பு நாடா சங்கடங்களோ முட்டுக்கட்டை போட்டால் நல்லெண்ணம் என்பது செயல் வடிவம் பெற்று மக்களுக்கு ஆதாயம் தேடித் தரவே முடியாது!

மாறாக, அரசின் கொள்கை அறிவிப்புகள் செயல் வடிவம் பெறுமானால் அடுத்த நிதியாண்டு நிச்சயமாக பிரகாசமானதாக அமையும்.

இந்த வாரம் ஒரு நற்செய்தியையும் பகிர்ந்து கொள்கிறேன். தனியார் நிறுவனங்களில் பொது மக்கள் போடும் வைப்பு நிதியை இன்ஷூர் செய்ய வேண்டும் என்று நான் சொன்னது நினைவிருக்கும். Federation of Indian Chambers of Commerce என்கிற அமைப்பும் இதே கருத்தைத் தெரிவித்திருக்கிறது. இந்த வலுவான அமைப்பு குரல் கொடுத்திருப்பதால் ரிசர்வ் வங்கியும் இந்திய அரசும் இவ்விஷயத்தில் கவனம் செலுத்தி ஆவன செய்யும் என்று எதிர்பார்க்கலாம்.

— வி. கோபாலன்



## குழந்தைகளுக்கு ஒரு சோதனை!

உங்கள் குழந்தை எதிர்காலத்தில் அதன் மனநிலைப்படி ஆங்கிலத்திலா, கணிதத்திலா, இசையிலா, எதில் ஈடுபாடு கொள்ளும் என்பதை குழந்தையின் இரண்டாவது வயதிலேயே தெரிந்து கொள்ளக் கூடிய கருவிகள் அமெரிக்காவில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. இத்தகைய சோதனைகளுக்கு எதிர்ப்பும் அங்கே அதிகரித்து வருகிறது!

— பாரீஸ் பார்த்தசாரதி.

● தவறு என்று அறிந்து கொள்ள முடியாமல் தவறுகளைப் புரிந்து விடுவான் அப்பாவி. தவறு எனத் தெரிந்தும் செய்து கொண்டிருப்பான் கடையன். தான் புரியும் தவறுகள் நீதி என நிரூபிக்கும் வகையில் வாயாடித்தனமாகப் பேசிப் பிறரையும் தவறு செய்யத் தூண்டுவான் கயவன்.

(வேதாத்திரி மகரிஷி - 'அன்பொளி')

— எல். கோபாலகிருஷ்ணன்.

● கடவுள் ஒவ்வொரு பறவைக்கும் இரையைத் தருகிறான். ஆனால் அதை அவன் கூட்டுக்குள்ளேயே கொண்டு போய் வைப்பதில்லை.

— ஜே.சி. ஹாலண்ட்

தகவல் : ச. லாவண்யா

● டிக்கெட் இல்லாமல் செல்வோர் சங்கம் ஒன்று மும்பையில் அமைக்கப்பட்டுள்ளது. இச்சங்கம் பயணச்சீட்டு இல்லாமல் சென்று பிடிபடுகிறவர்களுக்கு உடனுக்குடன் நிவாரணம் தருகிறது. ரசீதைத் தந்தால் போதும் அபராதத் தொகையை திரும்பித் தந்து விடுவார்கள்! சங்கத்தில் சேரும் போது உறுப்பினர் தொகையும் ஆண்டுச் சந்தாவும் செலுத்தினால் போதும்.

— 'அவுட்லுக்'; ராஜேஷ்

● இண்டர் நெட்டில் நாம் http, w.w.w என்ற எழுத்துக்களை அடிக்கடி பார்க்கிறோம். இதற்கான விளக்கம் இதோ:

http என்றால் Hyper Text Transmission Protocol என்பதாகும்.

w.w.w என்பது World Wide Web என்பதன் சுருக்கம்.

— த. இரவிச்சந்திரன்

# கல்கி-பாலு ஜுவல்லர்ஸ்

## இணைந்து வழங்கும்

# 'திருமண அன்பளிப்பு' ஜோக்

## போட்டி - 8

# முடிவு

"கல்யாணப் பத்திரிகையில் வித விதமா ரூபாய் நோட்டு படத்தை அச்சடிச்சிருக்கீங்களே? எதுக்கு சார்?"

"எல்லாம் 'மொய்'யை ஞாபகப் படுத்துவதற்குத்தாங்க!"

— சி.என். கணேசன்

*****

ஒரு கவரில் பத்து ரூபாயும் இன்னொரு கவரில் இருபது ரூபாயும் வச்சு எடுத்துக்கிட்டு வரவேற்புக்குப் போறீங்களே, ஏன்?"

"அங்க வைக்கிற டிஃபனுக்குத் தக்கபடி அன்பளிப்பை வைக்கலாம்னுதான்!"

— கானா. கணேசன்

*****

''மாப்பிள்ளை முன்னாள் அமைச்சரின் மகன் என்பதால், 'முனைப்புடன் முன்ஜாமீன் பெறுவது எப்படி?', 'சிறைச் சாலையை சமாளிக்க சிறப்பான வழிகள்' என்ற இரு புத்தகங்களையும் மணமகனுக்கு அன்பளிப்பு செய்திருப்பது நல்லாயில்லே.''

— எம். மும்தாஜ்

''என்னங்க! மொய்க் கவர் மேலே ரூபாய் நூறு, மைனஸ் பத்து தொண்ணூறுன்னு எழுதியிருக்கே''

''இது, வட்டிக் கடைக்காரரு 'மொய்க்' கவரு. ஒரு மாத வட்டியை எடுத்துட்டு மீதியை கவர்ல வெச்சிருக்காரு''

— ஏ. குமார்வேலு

*****

''மாப்பிள்ளைக்கு எப்பவும் ஆபீஸ் ஞாபகம்தான்...''

"எதை வச்சி சொல்றீங்க?"

''மாப்பிள்ளை அரசு அதிகாரி இல்



லையா... திருமண அன்பளிப்பை கை நீட்டி வாங்கிக்கிட்டு, பழக்கதோஷத்துல, 'கவலையே படாதீங்க... உங்க வேலையை உடனே முடிச்சுடறேன்'னாராம்..."

— மன்மதன்

*****

"தலைவர் வீட்டு கல்யாணத்துல 'திருமண அன்பளிப்பு' பட்டியலை எழுத பத்துப் பேரை வச்சிருக்காங்களாமே?"

"தொகுதி வாரியா கணக்கு குடுக்கணும்னு தலைவரோட கட்டளையாம். அதனாலதான்!"

— வி. அனுஷா

*****

"ஏங்க, பொண்ணுக்குத் திருமண அன்பளிப்பா குஜ்ரால் போட்டோவை கொடுத்துட்டு வர்றீங்களே... இதுக்கு என்ன அர்த்தம்?"

"எல்லாத்தையும் அனுசரிச்சுப் போனா, குறைஞ்சது மூணு வருஷமாவது மனைவி பதவி பறி போகாதுன்னு காட்டத்தான்..."

— எஸ். ரவிந்திரநாத்

*****

"என்ன இது திருமண அன்பளிப்புகளிலே ஒரு சின்ன பாட்டில்லே 'தண்ணி' இருக்கு?"

"அது 'தண்ணி' இல்லேய்யா, மணப் பெண்ணின் முன்னாள் காதலனின் 'கண்ணீ'ராம்!"

— என். புவனேஸ்வரி



"'பரண்' மேல, என்ன தேடறீங்க?"

"ராமசாமிக்கு இன்னிக்குக் கல்யாணம். என் கல்யாணத்துக்கு எவ்வளவு போட்டிருக்கான்னு தெரிஞ்சுக்க, 'மொய்' நோட்டைத் தேடறேன்...!"

— ஆர். வசந்தகுமார்

**பிரசுரமாகியுள்ள ஒவ்வொரு ஜோக்கும்**

**ரூ. 100 பரிசு பெறுகிறது...**

# சாலை ஓரச் சதிகள்

காயப்போட்ட கடலைக் கொடிகளும்
அதற்குக் காவல் வைத்த கற்களும்,
உருளும் வண்டிகளை உருட்டும்
பாதை ஓரப் பாசக்கயிறுகள்

வாரி மோதி இருட்டில் இறந்த தெருநாய்
சாரி சாரியாய் வண்டிகள் ஏறி
வாழ்ந்த உயிரின் சருகுச் சிதறல்கள்

அணையா தொடர் வண்டிகளின்
அணிவகுப்பு ஒளியில்
ஓட்டுநர் கைகளில் ஒப்படைத்த
உயிர்களைத்
தக்கவைத்துக் கொள்வோமா
என்ற பரிதவிப்பு

ஆளில்லாத ரெயில்வே கேட்
வாய்பிளந்து
விபத்தை விளைவிக்க நிற்கும்
பகாசுரர்கள்

பாதை ஓரக் கடைகளில்
வழிப்பயண உணவு மோசம்
வாங்கித் தின்கலாம்; அதனால்
வாழ்வே முடியலாம்.

உடலும் வயிற்றைக் குறைக்க
ஒரு ரூபாய் தர விரும்பினும்
ஒதுங்க நல்லிடமில்லை
ஒதுங்காது ஒதுக்கவும் முடிவதில்லை

வேகத் தடைகளின்
விவேகமற்ற அமைப்பும்
வாய்பிளந்த வழித்தடங்களும்,
தடங்கலாகி
உல்லாசப் பயணம் ரணமாகும்

சாவும், விபத்தும் சங்கடங்களும்
சகஜமாகிப் பழகிப் போனதால்
செய்திகள் குவியும்
மரித்த மனங்களின் குப்பைகளாய்.

— கொடுமுடி செந்தில்





# பாசமுள்ள பாண்டியரே

குற்றாலத்தில் சுளுக்கு எடுப்பவராக ராஜ்கிரண். குறி சொல்பவராக மீனா. மலேசியாவிலிருந்து வேலைமெனக்கெட்டு வந்து ராஜ்கிரணை லவ்வுபவராக ரோஜா.

இடைவேளை வரை 'இன்னும் கதையே நகரவில்லையே' என்று கஷ்டமாக இருக்கிறது. பிறகு நகரும் கதையமைப்பு கஷ்டப்படுத்துகிறது.

காதல் குறும்புக் காட்சிகளில் மீனா ஓகே. ராஜ்கிரணின் முகம்தான் சரியாக ஒத்துழைக்காமல் சங்கடப்படுத்துகிறது; குரல் கொழகொழக்கிறது.

'செய்திகள்' புகழ் பாத்திமாவுக்கு முக்கிய ரோல். சமாளிக்கிறார். கண்ணீரைத் துடைத்துக் கொள்ளும் காட்சிகளிலெல்லாம் மேக்கப் கலைந்துவிடுமோ என்பது போல் நாசூக்காக ஒற்றிக் கொள்வதையும். சோகக் காட்சிகளில் கண்கள் ஒத்துழைத்தாலும் லேசாகப் புன்னகைப்பது போல் உதடுகள் காட்சி தருவதையும் அவர் வரும் படங்களில் தவிர்க்க வேண்டும்.

பாத்திமா பாபுவோடு பாபுவும் இரு காட்சிகளில். அவர்கள் மகனும் படத்தில் இடம் பெற்றிருக்கிறானா என்று தெரியவில்லை!

மீனாவும் ரோஜாவும் தேடி ஓடி வந்து ராஜ்கிரணைக் காதலிக்கிறார்களாம். பாத்திமா அக்காவாம் - ராஜ்கிரணுக்குத் தன் தோற்றம் பற்றி அப்படியொரு நம்பிக்கை.

ராஜ்கிரண் படமென்றால் வடிவேலுவுக்கு ஒரு தனி ஸ்கோப் உண்டு. இதிலும். ஆனால் படத்தின் பெரும்பங்கு தூசிதெடி அடிக்கிற நிலையில், வடிவேலு - கோவை சரளா - செந்தில் காம்பினேஷனில் பழைய ஹிட் படங்கள் மற்றும் பாடல்களைக் கிண்டலடித்திருப்பது என்ன நியாயமோ? படத்தின் ஒரே 'புரட்சி' ராஜ்கிரண் பாண்ட்டில் (சபாரியில்) தோன்றுவதுதான்.

இசை தேவா - சொல்லுகிற மாதிரி இல்லை. பாடல் காட்சிகள் அத்தனையிலும் துணை நடிக நடிகைகளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் நடன(?) அசைவுகள் உச்சகட்ட குமட்டலை ஏற்படுத்துகின்றன.

ஒரு விமர்சனம் என்றால் நாலு நல்ல விஷயங்களையும் சுட்டிக் காட்டுவதுதான் நியாயம். அதே சமயம் அப்படி நாலு சிறப்பு அம்சங்களையாவது படத்தில் அளிப்பதுதானே நியாயம், இயக்குனர் கஜேந்திரன் அவர்களே!

— ஜி

பாரதன் அச்சகத்தில் அச்சிட்டு, பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; ஃபேக்ஸ் : 2345621.
ஆண்டுச் சந்தா : ரூ. 208/-; ஆறு மாதச் சந்தா : ரூ. 104/- (உள்நாடு).

தேர்ந்தெடுக்கப்பட்ட எழுத்துக்களுக்கு

# ரூபாய் ஐந்து லட்சம் மதிப்புள்ள உஜாலா பரிசுகள்

5 கலர் டிவி

இரண்டு நபருக்கு மோட்டார் சைக்கிள்

10 தங்க வளையல்கள் (1பவுன்)

250 மி. லி. கிங் சைஸ் ரூ. 3.16 ஆதாயம் !

10 நபர்களுக்கு ஒவ்வொரு வருக்கும் ரூ. 1000/-

25 தங்க

1/2 பவுன்

200 நபர்களுக்கு ஒவ்வொரு வருக்கும் ரூ. 500/-

400 நபர்களுக்கு ஒவ்வொரு வருக்கும் ரூ. 250/-

UJALA FOR SUPER WHITENESS OF CLOTHES

## உங்களுடைய கருத்துக்களை எங்களுக்கு எழுதவும்

இப்போது உஜாலாவின் டாம்ப்பர் - ப்ரூஃப் மூடியும், ஃபில்ஃபர் - ப்ரூஃப் டிராப்பரும் ஜோதி ஆய்வுக்கூடத்தில் டிசைன் செய்யப்படுகின்றன. உங்களைப் பாதுகாக்க அவை எவ்வாறு வேலை செய்கின்றன ?

இன்று, தின் லேயர் க்ரோமெடோகிராஃபி (TLC) மற்றும் காஸ் க்ரோமெடோகிராஃபி மாஸ் ஸ்பெக்ட்ரோமெட்ரி (GCMS) பரிசோதனைகளில் முன்னேற்ற நாடான ஜெர்மனியில் தடை செய்யப்பட்டுள்ள அமீன்ஸ் இல்லாத ஒயிட்னர் உஜாலா-வுக்கு சான்றிதழ் வழங்கப்பட்டிருக்கிறது. சருமத்தில் எரிச்சல் மற்றும் வாயில் பட்டால் விஷத் தீங்கு இல்லை என்று பரிசோதனையில் தெரிகிறது. மேலும் விஷத்தன்மையற்றது. அதோடு, உஜாலா பல இதர தனித்தன்மை வாய்ந்த குணங்களைக் கொண்டுள்ளது. அவை என்ன ?

உஜாலாவை உபயோகிப்பதற்கு சரியான முறை என்ன ?

விஞ்ஞான ரீதியற்ற ஒயிட்னர்களை நீண்ட நாட்களுக்கு உபயோகிப்பது ஆரோக்கியத்திற்கும், உடைகளுக்கும் நல்லதல்ல. ஆகவே அதுபோன்ற தயாரிப்புகளை உபயோகிக்கத் துவங்கியவர்கள் மீண்டும் உஜாலாவையே உபயோகிக்க ஆரம்பித்துவிட்டார்கள்.



**Write to : Jyothy Laboratories (UJALA), 2- A, Singarayar Mansion, AbhiramiAvenue, Meenambal Salai, K. Kannadasan Nagar, Madras - 600 118.**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka